மற்றுள பெருங்கொற் றாளர் சுமவாது மருட்டி யெங்குந்
தெற்றிய விவனை யோமுன் றெரிப்பதின் றெனவி லக்கக்
கொற்றவ விவரி லீங்கோர் கூடைமண் சுமந்தா ரில்லை
முற்றுமிங் கியானே நின்று சுமந்தன னெனமொ ழிந்தான். (௨௩)

செம்மையின் வேலை யொன்றுஞ் செய்திலனேனுஞ் சொல்லு
மம்மர்தீர் வார்த்தை யாலே யாரையு மழுப்ப வல்லா
னம்மையுங் கோறை ணாக்கத் தருமிவ னென்ன நாடித்
தம்முளே வெருவி முன்னர்த் தெரித்தனர் தமிழ்க்க ணக்கர். (௨௪)

கொடியதின் கணக்கர் போகக் குழம்புகொற் றாளர் நாப்பண்
முடியணை கூடை யாக முறுவல்கூர்ந் தினிய பாடித்
தடமிசைக் கொட்டணைத்துத் தாண்மிசைத் தாளே யிட்டுக்
கிடையற வுலக மெங்கும் படர்ந்தவன் கிடந்தான் மெல்ல. (௨௫)

வளர்கலா பார்ப்பான் வந்த மன்னவன் மனிதர் கண்டு
கிளரமண் சுமவா துறங்கி கிடப்பவன் யாவ னென்னத்
தளர்வுடை வேலை யாளர் சாற்றுவார் மற்றிவ் வுரு
ளொளிவளர் பிட்டு விற்பா ளிட்டவா ளெனவு ரைத்தார். (௨௬)

நெறிப்படக் கிடப்ப தென்னை வடிவனீ நின்னை யாருந்
துறைச்சுமை யாளென் றிங்குச் சொல்கின்றா ரின்று னக்குக்
குறித்தகோ லறையி லாங்கோர் கூடைமண் ணிட்டா யில்லை
சுறுத்ததி காரிக் குன்னைக் காட்டுவம் போதா கென்றார். (௨௭)

நல்லகா ரியம தென்று நயந்தவ ரோடுஞ் செல்லக்
கொல்லெறி யடிகுத் தென்று கூற்றெனத் தண்டஞ் செய்யும்
வல்லதி காரி கண்டு மனத்ததி சயித்துச் சால
மெல்லிய வடிவ னியார் விளம்பிடு விளங்க வென்றான். (௨௮)

தந்தைதாய் நட்டோ ருற்றோர் சகோதரர் பொருளொன் றில்லை
யிந்தமா நகரி லியானோர் மூலையி லிருக்குங் கொற்ற
னுய்ந்திட வெவர்க்கு நானு முதவுவ லென்னைக் கொண்டு
பந்ததி காரிக் கென்ன காரியம் பகர்தி யென்றான். (௨௯)

புத்தியு ளொழியாச் சித்தம் பொருந்ததி காரி நல்ல
பத்திசேர் குணவான் போலப் பகர்ந்தனை பகுந்து னக்கு
வைத்தகோ லறைக்கோர் கூடை மண்சுமந் திட்டா யில்லை
யுத்தரஞ் சொல்லா நின்றாய் கண்டில முனைப்போ லெங்கும். (௩0)

சதமுறை யடித்தற் குன்னைத் தகுந்தகா தல்ல வுன்றன்
விதமுறு வடிவங் கண்டே மெய்யொறுப் பட்ட தில்லை

யதர்பட விரைவொ டெம்போ யடையடி படாதென் றேவப்
புதியவ னடையா ளுகிக் கிடந்தனன் போந்து முன்போல். (ரு௧)

வேறு.

அவ்வயினில் வெய்ய வரசன் விடையின்வருஞ்
செவ்வி முறைசெய்வோர் தீரக் குறைபார்த்துக்
கவ்வை விளைத்து வருங்காற் கரையழிந்து
தவ்வுபுனற் கோலறையைக் கண்டார்க டாழ்வாக. (ரு௨)

காய்ந்து விரைவி னிகலிக் கறங்கென்னச்
சேர்ந்து சுமக்கின்ற சிற்றாளை யெற்றுபுன
லார்ந்தகரை யெங்கு முயர வுயராமற்
றாழ்ந்ததிது யார்கோ லறைவிரைவிற் சாற்றுகென. (ரு௩)

மன்ற றிகழ்பிட்டு வாணிச்சி கோலறையீ
தின்றிங் கவளிட்ட கொற்றா ளிவனுழப்பி
வன்றிறலீர் யாங்கள் சுமப்பமதி யாதுகிடந்
தின்று விளையாடு கின்றான்போ யென்றார்கள். (ரு௪)

வெந்தழல்கண் சிந்த வெகுண்டாங் கவர்கண்டு
சிந்தைசிறி தஞ்சாது தீரத்து மண்சுமவா
திந்த விளையாட லெக்கா ரணமென்னக்
கந்தரநோ வச்சுமப்பல் காரணமொன் றில்லென்றான். (ரு௫)

இன்று விரைவி லெழுந்து சுமவாயேற்
பொன்ற வடிப்பமென வஞ்சினன் போலெழுந்து
மன்றறிகழ் கொட்டா லொருகூடை மண்வெட்டா
வென்றிமுடி மேல்வைத்து மெல்ல நடையிட்டான். (ரு௬)

வேறு.

உன்னவரி யான்மேன்மை யங்க யற்க ணுமைகொங்கை படச்சிவக்கு
மெய்யன் முற்றுந், தன்னுருவ மென்னுமது மண்ணிற் காட்டத் தளருநடை
யிடக்கண்டு தண்டஞ் செய்யுந், தென்னன்முறை செய்வோர்க ளங்தோ விந்
தச் செற்றயக் கொற்றாளின் கையிற் சற்று, நன்மையிலை யுடைப்படையா
னெனப்பி டித்து நடுமுதுகிற் கறுத்தடித்தார் சிவக்க நாடி. (ரு௭)

வேறு.

மன்னிட வடிப்பக் கங்கைக் கரையுயர் மண்ணை யோங்கக்
கன்னல்சேர் செந்நெல் வைகைக் கரையிடா முறுவ லோடு
மென்னையே னடிக்கின் றீரொன் றியைந்தகொற் றாளர் நாப்பண்
டன்னுரு வொளித்தான் புக்குத் தன்னைத்தான் பிடித்த டித்தான். (ரு௮)

லுடைத்தபடி செய்யுந் தூய. வேந்தர்புக ழருட்சொக்கர் நம்மேல் வைத்த மெய்யன்பு வையகத்துக் கண்டே மில்லை, யேந்துதிரு வாதவூர் நாய னீரோ யெனத்துதிப்ப யாரும்வியந் திறைஞ்சி னார்கள். (௪௬)

செந்நெறிசேர் விசும்பிடையிற் றோன்றுஞ் சொல்லைத் திருவாக்கே யெனத்தெளிந்தாய் தேவே றண்டோ, நின்னையடைந் ததுகொண்டிப் பேறு பெற்றே னிக்கரிய வெம்பாசத் துவக்க றுத்தே, னென்வழியிற் போகுவலின் றைய நீக்கி யினையில்லா வெந்தையையுண டென்று ணர்ந்த, வுன்னருமிப் பிரமாணந் தானின் செல்வ மோங்கியிடுந் தீங்கின்றி யுண்மை யென்றே. ()

வே று.

வைத்தரு ணமச்சி வாய வாழ்கவென் றெடுத்தாங் கோதி
யுத்தமர் போகக் கண்ட வுவகைகூர் செழியர் கோமான்
பத்தியிற் பினசென் றேத்திப் பணிந்துநல் விடையிற் போந்து
சித்திர மண்ட பத்து ளிருந்தனன் செயலை வாழ்த்தி. (௪௮)

வாழ்ந்தருள் பெற்ற வேந்தன் மந்திரித் தலைவ னைப்பார்த்
தேய்ந்தவா ரியந்தா னுவ தறிவநிங் கினிநீள் வாரி
சூழ்ந்தமா நிலதத்துத் தூய சூத்திர ரொழிந்து நீதி
வேந்தர்மாட் டமைச்சி னுக்கு வேறிய ராகா ரென்றான். (௪௯)

தொன்னெறி வாத வூரர் சொக்கனை லயத்துப் புக்கின்
றென்னையா ளுதற்கு நாதா வினப்பரி யிட்ட தன்றி
மன்னிய முடிவ ருந்த மண்சுமந் தனையே யந்தோ
வன்னபா மேனி நோவ வடியுமுன் டனையே யென்னா. (௫௦)

உத்தர கோச மங்கை யுழுக்குன்று று குருவங் கண்டு
சித்திரக் கோவை பாடித் தில்லையா பலத்து வாழ்வன்
றத்தன்யா னத்து னைப்பப் போந்த தமிழ்கள் பாடிப்
புத்தன்வா தையும்வென் றியாரும் போற்றுபொற் பதம டைந்தா. (௫௧)

தொல்லைமா மன்ன னெந்தை சுத்தரு விருப்ப வேடன்
பல்லுறு மிறைச்சி நஞ்சம பாலகு ளினைச்சி யம்மை
நல்லபிட் டயிலக் கண்டே நல்லடி யார்க்கு நல்லான்
மெய்யியல் பாக னலால் யாவரோ ரெனவி யந்தான். (௫௨)

பொருவருங் கோயின் முற்றும் பொன்னினுன் மேய்ந்தி யாரும்
பரவவென்ன குடைக ளாசி பதுசா மரைதா சேரு
னரிவையர் முதலா நல்கி முன்னையி னன்பு பூண்டு
தனாயினை யமாவில அரலர் பெருமான் னெறியி னுண்டான். (௫௩)

வெறுமை முறுப பட்ட மெய்ந்நா வழியும் வெய்ந்து
[illegible]

னாமக ளுயர்ந்து றக்க நண்ணிய வாறுங் கண்டு
பரவிய மனிதர் முன்னிற் பல்பெருஞ் சிறப்பின் வாழ்ந்தார். (௫௪)

நிறைவுறு மதியங் கண்ட நெடுங்கடல் போலச் செல்வம்
பிறிவற விளங்கி மன்னன் பெருந்தபே ருலகம் பெற்றான்
மறைபறை யிறைவன் பிட்டுண் டடியுண்டு மண்சு மந்த
வுறுகதை கற்போர் கேட்போ ருயருல காள்வ ரன்றே. (௫௫)

சுந்தர னவதா ரங்கள் சொல்லுவோர் நினைப்போர் கேட்போர்
சந்தத முனிவர் வானோர் சாரணர் சித்த ரேத்த
முந்தொளி விமானத் தெய்தி மூவுல கத்தி னோடு
மிந்திரன் முடிமேற் றாள்வைத் தேறுவர் சிவலோ கத்தே. (௫௬)

ஆகத் திருவிருத்தம் - ௭௱௧.

## ௩௧.—விருத்தகுமாரபாலரான திருவிளையாடல்.



சீர்விளங்கு முன்னொருகாற் பாண்டி நாட்டுச் சிறந்தபெருங் கிராமத் தோர் மறையோன் செல்வம், பார்புகழுங் குலவொழுக்கம் விழுப்ப மிக் கோன் பணிமதுரைச் சொக்கற்கே பத்தி பூண்டோன், பேரியலாண் மகவி ன்றி யருமை யாவோர் பெண்பயந்து வேதத்தால் வடிவாற் சொக்கை, நேர வரு முயர்பிரம சாரிக் கிந்த நேரிழையைக் கொடுப்பமென நிச்சயித்தான். ()

இந்தகவி னிருந்தோனொண் டொடிக்கு நல்யாண் டெட்டுநிறை தரு காலை யோதி மிக்க, புத்தியினோர் பாகவதப் பிரம சாரி புக்கிலுழைப் பிச்சை கொள்வா னுறுகக் கண்டு, வித்தையினால் வடிவான்மற் றொன்றுங் காறான் விளைவொடுகன் னியையுதகஞ் செய்யக் கண்ட, சுத்தமுடை மாதாவுஞ் சுற் றத் தாருந் துயருழந்து நனிவெகுண்டு சோகங் கூர்ந்தே. (௨)

குன்றமனந் தாதையையிப் பிரம சாரி குடிமுதல்கே ளாதினிய வேதங் கொண்டே, நன்றிபுனை கன்னிதனை யுதகஞ் செய்தாய் நன்றறியா யென்றி கழ நல்ல தாதை, யொன்றியிவன் கோத்திரசூத் திரங்கேட் பாமிங் கும்பர் பிரா னருளினா லொத்த வாயி, னின்றிதுகாண் பேமென்று கேட்பச் சொ ன்னா னிடுகுறிகோத் திரமுதன்மற் றியாவுந் தோன்ற. (௩)

இன்பமுறு பாகவத னியாவுஞ் சொல்லி யிடுகுறிவே றென்னலுமே யே ங்கி நின்றோ, ரன்புமுதற் பலகுணங்க ளுண்டா றனு மவனிமீ தொருகுற் றம் யாவர் மாட்டுந், துன்பமுற வுண்டாகா திராது வேத சூத்திரங்கோத் திர ங்கல்வி யொழுக்க மற்று, நன்புதரப் பெற்றேமென் றுறி யாரு நலந்திழ்மா தாவையுஞ்சொன் னயத்தா லாற்றி. (௪)

தந்திரநூன் மறைவிதியிற் சாறு செய்தே சடங்குமுடித் துதகநெறி தப்பா வாறு, முந்தவளித் தினியபல நல்கி நல்ல மொழிமொழிந்து வழிவிடுப்ப வணங்கி னோடுஞ், சிந்தைமகிழ்ந் தருமறையோன் மாம னீந்த செல்வமொடுந் தன்பதியிற் செல்லக் கண்ட, பந்தமுறு தந்தைமுத லனைவற் றூர்கள் பரிவுகள்செய் தெதிர்கொண்டார் பண்பின் வாழ்த்தி. (டு)

ஆங்கினிய பரதேசம் போன பிள்ளை யணிபொலிய மணஞ்செய்து மாதினோடு, பாங்கின்வர வென்னதவஞ் செய்தா யென்று பலர்புகழக் கண்டிருந்தும் பாவி மாதா, வீங்கிவளோர் சைவன்மக ளென்னக் கேட்டா ளெரிதருவெப் பத்தினொடுந் தலையை மோதித், தாங்கலருந் துயருழந்தா ளெடிது யிர்த்தாள் சாற்றுமா றென்னென்று டணியா ளாகி. (சு)

வளமைமறை யோனிறைவன் செயலா லந்த வடிவுநிறை பவித்திரைபான் மனம்வை யாம, விளமைதரு பருவத்தே யிருப்ப நாளு, மீசனுக்கே மனம்வைத்த நேச வல்லி, யளவிறந்த பாகவதர் புசித்தல் கண்டாண் டாழ்துயருற் றின்னமுது படைத்து நந்தந், தளர்வகல நுதனீறு விளங்க விங்கோர் தவமுனிவர் நணுகாரோ வென்பாள் சாற்றாள். (எ)

முன்னையவ ணல்வினையான் மாமன் மாமி முதலாவவ் வுழைநின்றும் பிறிதோ ரில்லத், துன்னருமோர் காரணத்தாற் போக வோர்நா ளுற்றவர்கட் குற்றவன்மற் றியாவும் வல்லான், றென்னனையா ளுடைமதுரைச் சொக்க நாதன் றிருநீறு விரன்மூன்றுந் திகழச் சாத்தி, மின்னணிநூன் மணிமார்பில் விளங்க மூத்த விருத்தர்த ளுருக்கொண்டான் விரும்பி மாதை. (அ)

வேறு.

முன்வளை தனுவன தனுவு மூத்ததோர்
பன்னக வுரியன பழைய மேனியு
மென்மர லனநரை முடியும் வீழ்ந்தெழு
நன்மைகொ டளர்நடை யொடுந டுக்கமும். (கூ)

கையுறு குடையொடு தண்டுங் காதினிற்
செய்யகுண் டலமும்வீ ழுடையுஞ் செவ்விசேர்
துய்யபுன் முறுவலுந் துளங்க மங்கலத்
தையனீ பிச்சையி டென்னச் சார்ந்தனன். (கO)

வேறு.

உழையிடை யமுது படையெனக் கண்ட வுத்தம வணங்கெதிர் வணங்கித்
தொழுதுபே ருலகிற் றனிவினை யாடுஞ் சொக்கனே வறிதிலே னடியே
னெழினுத னீறு காணுமுன் போன திடரென்ன புண்ணியஞ் செய்தே
னழகுடன் றிகழுந் தலைவரே யமுதென் றகத்தினு ளெழுந்தரு ளுதற்கே. ()

நாதனே சடியள் கொடியளென் மாமி நன்குள வறைக்கத வடைத்துப்
போதிலோ ரகத்துப் போயின ளமுது படிபுறம் பில்லையென் செய்கே

றுதுமே லமுது செய்யுமா றென்ன வுத்தமன் சித்திர வணங்கே
சாதிசேர் கதவந் திறக்குகீ செலுங்காற் றுணிந்தினி யகம்புகுந் தெடுத்தே.()

ரிவொடு பருப்பு மன்னமு மாகப் படைவயிற் றுறுபசி பெரிதென்
ருள்பட வுரைப்பக் கேட்டலும் பதறி யறைக்கடி வாயிலிற் செலுங்கா
யரனுறு கதவஞ் சடக்கெனத் திறப்ப வொண்டொடி கண்டதி சயித்து
பினைவினுட் புகுந்து சிறந்தன வெடுத்தாங் கமைத்தனள் விருப்புடை யடிசில்.

அரம்பையங் குருத்து மருங்குற விரித்தாங் கடையின்மென் போனகம் படை
யிருந்தின னுதர பூரண மாக வுண்டெழில் விளைமணக் கோலப் [ப்ப
பெருந்தகவிலங்க வெண்ணிரண் டாட்டைப் பிள்ளையாய் விளங்கினன் கண்ட
கருந்தடங் கண்ணி யதிசயித் தஞ்சி நின்றனள் காமனும் வருத்த. (கச)

வேறு.

வாசிகை முடிபி றங்க மார்புதாழ் மாலை மின்னத்
தூசெழின் மருங்கி லங்கத் துளங்குதண் கலவை சாத்தித்
தேசுடை யணிய ணிந்து திருமுகங் கவினெ றிப்ப
வாசைகூர் தருமெய் கொண்டு விளங்கினு னநங்க னனை. (கரு)

இந்நெறி நிகழுங் காலை யேந்திழை தனது மாமி
பொன்மனை வாயில் வந்து புகுந்தவர் யாரோ வென்ன
வன்னமோர் மாற்ற மின்றி யங்கையை நெரித்து நின்றாள்
பன்னகா பரணன் கண்டோர் பாலக னுருவங் கொண்டான். (கசு)

வேறு.

துன்னுபன் மணியி னல்லணி சிறந்த தொட்டிலுட் பட்டணை நிரம்பப்
பொன்னனை ஞானு நன்னுத லீறும் பொலியநோக் கஞ்சனந் துலங்க
மென்னகை செய்து தன்னடி மலரின் மேதகு பெருவிர லமுதாண்
டன்னையில் புதல்வன் முன்விளை யாடி யழுதனன் பவளவாய் நெரித்து.(கஎ)

அவ்வயின் வந்த தீவினை மாமி யகத்திடைப் புகாமுனங் கண்டே
வெவ்வுரை யோடு முள்ளழன் மண்டி வெகுண்டுமுன் னிவ்வணைக் கிடந்த
செவ்விய பால னெவென வினவத் தேவியுந் தெருமர லுற்றுக்
கொவ்வையங் கனிவாய் திறந்துரை செய்வாள் கூடலு யகன்றிரு வருளால்.

வேறு.

தீதிலா வடிவி னேங்குந் திருவினு ளென்றோர் மிக்க
மாதவ முடையா ளீந்தத் தொட்டிலுள் வளர்த்தி வைத்திப்
போதுதன் கணவ னேடும் போயினு னேக்கிக் கொள்ளென்
ருதர மாமி கேளென் றடைவினி னெடுங்கிச் சொன்னாள். (க௯)

தரும்பிறர் பாலன் றன்னைத் தையலாய் நீயோ காப்பா
யிருந்தவா றழகி தைய கோவென விடித்து வீழ்த்துப்

பரந்தவொண் டொட்டி லோடும் பாலனைப் புறத்துப் போக்கி
வருந்திடக் கதவ டைத்தாண் மருமக டனையுந் தள்ளி. (௨0)

வள்ளன்மென் முறுவல் கூரா மழவுருக் கரந்து பண்டைத்
தெள்ளுபே ருருவங் கொண்டு தீதிலா மடமா துக்கு
மொள்ளிய கற்பான் மிக்க வுமையுருக் கொடுத்துக் கூட்டி
மெள்ளயான் சொக்க னென்று போயினான் விசும்பிற் காண. (௨௧)

அடியவர்க் கெளிய சொக்க னருடனைப் பாரீர் காணப்
பொடியணி மாது போன புதுமையைப் பாரீ ரென்று
படிமிசை யோர்க ளெல்லாம் பரவினர் நெடுமா லேத்தக்
கடிகமழ் சடையி னானுங் காவல்சேர் மதுரை புக்கான். (௨௨)

ஆகத்திருவிருத்தம் - ௭௬௩.

## ௩௨.—மாறியாடின திருவிளையாடல்.

முன்னமோர் காலந் தொல்லை முறைமையி னவனி காத்து
மன்னுமோர் தென்னர் கோமான் மதுரையம் பதியி லோங்கும்
பொன்னெயி லிலங்கு கோயிற் புனிதனுக் கன்பு பூண்டு
பன்னெறித் தானை சூழப் பகையற வாழு நாளில். (௧)

குன்றவி லீச னாடுங் கூத்தினைக் கற்க லாகா
தென்றலே தொழிந்த கல்வி யாவையு முற்றக் கற்று
வென்றிகொ ளுமை மெண்ணெண் கலைவல்லா னெனவி ளம்பி
யொன்றிய புகழை யெங்கும் பரப்பினா னுலகத் தோங்க. (௨)

அன்புறு வளவன் மிக்க சீர்த்திகேட் டாடன் முன்னா
வின்புறு கலைகள் யாவுங் கற்பமென் றிகலிக் கற்றுத்
தன்பெய ருலகி லெண்ணெண் கலைவல்லா னென்று சாற்றி
நன்புட னிருப்ப வாங்கோர் பாடக னடைந்தா னொடி. (௩)

எந்தைகேண் முற்றுங் கற்றோர் நீயலா லுண்டோ வென்று
முந்துறப் புகழ்ந்து வாழ்த்தி முடிவில்பல் சிறப்பு நல்க
வந்தநல் வரிசை யிற்போந் தாடக மாடக் கூடற்
கந்தனை யனைய கல்விக் கைதவன் றன்னைக் கண்டான். (௪)

மனத்தினைக் கவரு நல்ல வார்த்தைகள் சொல்ல வல்ல
வினைக்கொள்பா டகன்வ ணங்கி மீனவர் குலவி ளக்கே
கனத்தமா நிலத்து ளெண்ணெண் கலைவல்லா னென்று நாம
நினக்கல வினைத்தும் வல்ல சேரியற் காகு மன்றே. (௫)

வளம்படு கூத்தும் வல்லன் மற்றதோ வூறியாய் நீயென்
றுளம்பட வஞ்சா னுஞ்சி யுரைத்திடக் கேட்ட மாறன்
றளர்ந்துளை செய்வான் கல்வி சாற்றின்மா நிலத்தி யாவு
மளந்தறி வாரு முண்டிங் கறிந்திடா தாரு முண்டே. (௯)

இன்னியல் வாண வென்ன யாசக னுக்கு மென்று
பின்னரு முரைப்ப வுட்கிப் பேசரும விளிவிற் கூடி
மன்னவன் காட்டா னுசி வாழ்த்தியா சகனை வேண்டும
பொன்னணி யாடை நல்கி விடுத்தனன் பொலிவு கூர. (௰)

மந்திரி கட்குச் சொல்லி வழங்கிய விருளை நோக்கி
யந்தவொண் புயங்க நட்ட மாடிட வேண்டு மென்று
சந்துற வாமத் தாண்மேல் வரவலத் தாண்மே னின்று
சிந்தையால் வருந்தி முற்றக் கற்றனன் சிறிது நாளில். (௧௧)

நாணில முய்ய முன்ன நாயக னாடுங் கூத்தை
மாணிட ராட லாகா தென்றநாம் வருந்துக் கறமே
மீனமி லாத சென்னி செற்றத்தா லென்று சால
மீனவன் றுயர முற்று நெஞ்சக மெலிவா னானும். (௧௨)

அன்றியு மொருநா ளென்றி யடுத்தநாள் வளைத்தெ டுத்து
நின்றவு நோவக் கண்டே நினைப்பினேன் கணத்தும் போது
மின்றுநின் றிடவொண் ணூதா யிருந்தனங் கென்றுங் கெட்டேன்
மன்றுற நின்று னந்தோ மாறிநின் றாடா தென்றான். (௧௩)

தருசன முதுபே ரண்ட சராசர மனைத்துந் தாங்கும்
பெரியவ னுதை லாலே பேசருந் தாள்வ ருத்து
கருதினங் குணடா காரா யிருக்கினு மிருக்குங் காணிற
றெரிவரி தவன்றன் செய்தி யெனமனந் தெளிவன் மீண்டும். (௧௪)

இப்படி வருந்தல் கண்டே யரங்கமீ சானக் கோணத்
தொப்பருந் திருமன் றத்தி லும்பரோ னமேவண்ண முன்னை
மெய்ப்பட வாடுங் கூத்தை விட்டுமே லவலத்தாள் முந்தித
தப்பெரும் புதுமைக் கூத்தை யாடினு னந்த வீசி. (௧௫)

வேறு.

பேறுசால் பதஞ்சலி முனியும் பேருண
வீறுசால் வியாக்கிர முனியுங் கண்டுகள
றாறுபாய் தரமுன மாடுங் கூத்தரு
மாறனும் துயர்கெட மாறி யாடினார். (௧௬)

மார்தரும் வலப்பத மிடப்ப வப்பினை
சார்கரு மிடக்கால வலப்ப [illegible]

வாதுறு கூத்தினை யாடி னாசறு
கோதைசூழ் தாண்மிசைக் கொடியுங் கட்டினான், (௧௪)

எழிறரு மன்னவ னொழிவி லேதமும்
பொழின்மிசை யாடுவோர் வலியும் போக்கிட
வழகுடன் மாறிநின் றாடுங் கூத்தினைத்
தொழுதவம் பிகையும்வெந் துயர நீங்கினாள். (௧௫)

வேறு.

நத்தமார் நடுநள் ளியாமத் தருமறை நாதம் பாடப்
பெத்தமா னிடரா லாடுங் கூத்தினை யொழிந்து பீடா
ருத்தம வருங்கூத் தாட வும்பர்கோ னயன்மா லாதி
யித்திற மியார்வல் லாரென் றதிசயித் திறைஞ்சி னாரால். (௧௬)

தொண்டர்கள் விடியு முன்சென் றுறைசெயத் தொழுதுட் கண்ட
வண்டமிழ் மாறன் வைத்த மந்திரனுங் கடிது வந்து
பண்டருங் கூத்துக் கண்டான் பரவினான் றொழுது வீழ்ந்தா
னண்டர்நா யகனே யுய்ந்தே னெனவதி சயித்தா லித்தான். (௧௭)

வேறு.

தெரிதரு கருணைச் சோதியே வலப்பொற் சேவடி யாலுள திருக்கூத்
துரைசெயி னுலகத் தெங்கணுங் காண வுளதது புதுமையோ வல்ல
வருமையா விடப்பொற் சேவடி யாலிங் காடிய திதுபெரும் புதுமை
கருதிநின் றடியே னினியுனை வேண்டிக் கொள்வதோர் காரிய முண்டால். (௧௮)

படியக மிசையிற் பரிவுள நினக்கே பரிவுள மதிக்குலம் விளங்க
வடிவுறு திருக்கூத் தென்றுமிவ் விடத்தே மன்னிட வேண்டுமென் றேத்த
முடியுடை வேந்தே யதுசெய்வ லென்றே முழங்கிட வுயர்திரு வாக்குக்
கடிகொள்வான் மிசையிற் றோன்றிடக் கண்டு துதித்தனன் களித்தகண் டுளிப்ப.

வேறு.

மன்னிய பெரிய சிற்றம் பலத்தினை வரிசை கூரப்
பொன்னினால் வேய்ந்து முத்தாற் புரிவலித் தணிசி றந்த
மின்னொளி மாணிக் கத்தால் விளிம்புசேர்த் திலங்க வெங்கும்
பன்மணித் தாம நாற்றிச் சிறப்பித்தான் பண்பு கூர. (௨௦)

மதியினை நிகர்த்த முத்தக் கவிகையு மாணிக் கத்தாற்
கதிர்விடு கொற்றக் கற்றைக் கவரியும் வயிரஞ் சேர்ந்து
நிதிதரு கனக சிங்கா தனமுநீண் முடியும் பூணும்
புதியவா சிகையு மற்றுப் புவியும்வேண் டுவகொ டுத்தான். (௨௧)

வேறு.

மன்னவர் மன்னன் பன்முறை வணங்கி மகிழ்ச்சிமாக் கடலிடை மூழ்கித்
தன்னுடை யிடத்துப் போந்தடி யவர்க டம்பெருந் துயரறிந் திரங்கும்

பன்னியற் பெருமான் றன்வயின் வைத்த பரிவினைக் கண்டுகண் டுவந்து
மின்னொளி விளங்கு மடங்கலா சனத்து மேவினி வியப்பவீற் றிருந்தான். (௨௨)

## வேறு.

அன்றுமுன் னதிர வீசி யாடுவா னென்று மேயார்
குன்றமுன் மாறி யாடிக் கொடியிட்ட பெருமா னென்று
மன்றுற வழங்கக் கேட்ட வளவனு மிகல்விட் டன்பிற்
சென்றுமுன் வழுத்தி னனச் சிவனினுஞ் செழியர் கோவை. (௨௩)

இத்திருக் கோலந் தன்னைத் தொழுபவ ரென்றுங் குன்றாப்
புத்தியும் பொருவி லாத பத்தியும் புகழு முண்டாய்ச்
சத்திய ஞால முற்றுந் தனிக்குடை நிழலி னண்டு
முத்தியும் பெறுவர் தீரா மும்மல மம்மர் நீக்கி. (௨௪)

கோடிய லேன மாகிக் குவலய மிடந்து முன்னந்
தேடிய நெடுமால் காணச் செழுஞ்சுடர் மேனி சொக்க
வாடிய மாறன் றேற மதுரைமா மன்றுள் மாறி
யாடிய பாதங் கண்டே னருவினை கண்டி லேனே. (௨௫)

ஆகத்திருவிருத்தம் - ௮௩௮.

# ௬௬.—பழியஞ்சின திருவிளையாடல்.



மாசிலா மதுரையிலோர் மறையோன் முன்றன் மனைவியொடு முலைப் பாலுண் பால னோடு, நேசமுடன் மாமனிடத் தணையப் போங்கா னெறியி டையா தவன்வெய்ய கதிரா னொந்து, பேசரிய வருந்தண்ணீர்த் தாகத் தாங் கோர் பெருமைதரு வடதருவி னீழன் மேவி, யாசின்மட மாதினைத்துக் கிடப்பக் கண்டே யகன்றனன்முன் றண்ணீர்கொள் டொலைவா னெண்ணி. (௧)

விரைவொடுபோ யினபின்னர் முன்னோர் வேடன் வேட்டையின்மேல் வந்துவிழுங் கிளியை யெய்து, பரியவிலைக் கொம்பின்கட் டொங்கி னான்ற பகழிமருத் தாலசைந்து பாவை மார்பிற், கருங்கிழா முதுகன்க ணுருவி யப்பாற் கழலுங்காற் புனல்கொண்டு வந்து கண்ட, வரியகனை யன்றரியா னுற்று ளுகி யழுதுவிழுந் தலமந்தா னுவி சோர. (௨)

அழிகின் லருங்குலத்தா லன்பா னின்போ லாரொப்பா ரெனக்கினியா ருண்டென் றுறு, விழிபெருக முகத்தறைந்து கொளுங்கால் வேறோர் வேட் டைவேட் டொருவேடன் விரைவிற் றேன்றப், பழிகருதா மிவன்கண்டு வாரா யிந்தப் பழுதிலா வெழின்மாதை யேது வேண்டி, யிழிவுபடு குலத்தவனே கெடுவாய் கொன்று யென்றனைஞ் சினனந்த வீரன் றானும். (௩)

பறையுமது கொடிதடியேன் கொன்ற தில்லை பழியைவே றுராய்ந்து கொள்ளு மென்ன, மறையவன்போ யாவாறு வெகுளி பொங்கி மறித்தவனை நெறிப்படிமண் ணுலகாண் மன்ன, னறமலியும் வாயிலிற்போ தென்று கொண்டாங் கழுங்குழவி யொடுமுறையிட் டரற்றிச் சென்று, நெறியுடைய வமைச்சர்கா ளிவ்வெவ் வேட னெறியிடைக்கொன் றனெய்தென் மாதை யென்றான். (௪)

மந்திரிக ளவன்வருந்திப் புகன்ற வாறு மாறனுக்கு விண்ணப்பஞ் செய்ய மாறன், சிந்தைபரி தவித்துநெடு வாயில் வந்து தீராம லழுங்குழவி தனையுமிக்க, வெந்துயரத் தொடுமுறையிட் டெய்தா னென்னும் வேதியனை யுங்கண்டு மெலிதல் வேண்டா, வந்தனைநீ யெனச்சொல்லி யாற்றி வெய்ய வடுங்கணைவே டனைநோக்கி யருளிச் செய்வான். (௫)

வினையுறவே டவநின்னைக் கொல்வ தில்லை மெய்ப்படநீ செய்தியுரை யென்ன வேடன், கனைகழற்றென் மன்னவனே நீதி வேந்தே கருணையனே நாயடியேன் கொன்ற தில்லை, மறுநெறியி னாராய்ந்து கொள்க வென்று வணங்கியுட னடுங்கிவியர்த் தரைப்பக் கண்டு, தனதுளநொந் தருமறையோன் மனத்தகத்துத் தணியாத பெருந்துயரந் தணியச் சொல்வான். (௬)

வதமொழி மறையோனே கரிய வேட னியம்புமொழி கேட்டனையே யாமா ராய்ந்து, நீதிபடச் சொலநின்றே மம்பால் வீந்த நேரிழைகுன் றவாறு நலஞ்செய் தெய்திங், காதிவிதி யொருவராற் றடுப்ப வொண்ணு ததுநீயு மறிதியே யெனவி டுப்ப, வேதியன்போய் நனியழுங்குங் கிளைஞர்க் கூட்டி விதியின்கட் டகுந்தகனஞ் செய்தான் விம்மி. (௭)

செந்நெறிசேர் சுந்தரனுக் கன்பு பூண்ட தென்னவன்வே டனையழைத்துத் தெளிந்திப் போதே, யுன்னையும்வே றுடன்களைவன் சிறையிற் போகென் றுயர்ந்தசொடுஞ் சிறைக்கூடத் தடைத்துத் தானே, யென்னையுமா ளுடைமதுரைச் சொக்க நாத னெங்குருமெனான் யாவுமளந் தறிவான் முன்னர், மன்னியிது விளங்கினல்லால் விளங்கா தென்று வரிசைதிக ழாலயத்து வந்து புக்கான். (அ)

தென்றமிழ்நா டுடையானே யறஞ்சொல் கோவே தேவாதி தேவேநின் னருளால் வைய, நன்றியக் திடக்காக்கு மடிமைக் கின்று நாடரிய பெரும்பழிவந் தடைந்த தெங்கு, நின்றறிய வல்லானீ யல்லா லுண்டோ நினக்கடிமை வேண்டினறி வித்தி தோன்ற, வென்றலுமஞ் சினவீச னகர்சோ தித்தற் கெய்தெய்தி னறிவிப்ப மென்றான் றேற. (௯)

மன்னவன்வின் னிசைகேட்டு மகிழ்ந்தா லித்து வளமைபுனை தன்னிடத்து வந்து விள்ளான், முன்னைமுறை யுண்டிகழித் தருளாற் றனே முற்றியகங் குற்போதி னகர்சோ திப்பான், றன்விணாவிற் போந்துலவுங் காலைச் சேர்ந்தோர் தவப்பிரம சாரிமணஞ் செய்யா நின்ற, மின்னுமனைப் புறத்துறுதின் னையின்க ணியாரும் வெருவுமுருப் புனைந்திருவர் மேவக் கண்டான்: (௧0)

வேறு.

தெரிவுற விவனை யறிகுவ மென்று சென்றரு கணைந்துரு வொளித்துப்
பொருவரும் வீர னின்றிடுங் காலைப் புலப்பட நிலைப்பட ருரைப்பார்
விரையுறுப் புனைந்து மணஞ்செயு மிவனை விரைவொடு புதுமையா வின்று
பரியொடு கொண்டு போய்விட வேண்டும் பந்தரோர் பரித்திட வென்றார். ()

ஈங்கிது பகரக் கேட்டவாள் வேந்த னிலங்கவீ தறிகுவ மென்றே
நீங்கருங் கருணைச் சொக்கநா தனையே நினைந்துதன் றுண்மையே துணையா
வோங்கிய மனத்தின் வெளிப்பட நணுகி யுரன்பட மருங்குற நின்றே
யாங்குல குயிர்க ளேங்கிடு முருக்கொண் டணைந்தநீர் யார்கொலோ வறியேன்.

இங்குறை செய்த வாறுகேட் டனனின் றெப்படி மெய்ப்பட மன்ற
றங்கிய பெருங்கல் யானைமுன் செய்யுந் தார்மண வாளனின் னுயிரை
மங்குறக் கவர்வ துரைசெயு மென்ன மற்றவர் திரளு யிருந்தாய்
கொங்கவிழ் தாம வீரனே யாங்கள் யமபடர் கொண்டுபோ மாகேள். (௧௩)

இம்மண வாளன் மெல்லிள மாதை யினிபகைப் பிடித்திடு மளவிற்
செம்மனை யாத்துக் கொல்லையற் றூனை திறம்படு கோடிலா மொட்டை
வெம்மைசேர் பசுவுண் டார்த்ததும் பறுத்து விடுப்பமற் றதுதிரண் முழவின்
சும்மையின் வெருண்டு முட்டிடக் கொண்டு போகுவந் தொழுதியு மோடி. ()

வேறு.

இயம தூத னைய றில்லை யென்று சொல்ல மன்னவ
னயம தெய்தி நீதி வாயி னண்ணி வாடு முனிவனைப்
பயமு றூத ழைத்து வந்து படர்கள் பின்னி றுத்தியே
யயமு றூது படர்கள் சொல்லு மறிவு கேளெ னச்சொனான். (௧௫)

நன்றி சொண்ட முனிவ னெஞ்சு தேற நாத னருளினு
னின்ற தூத னுக்கு மற்று யர்ந்த தூத னினைவுறக்
கொன்ற வீறு கூறு மொன்று குன்ற மன்ன குஞ்சர
மொன்று சீய மொன்று நாக மொன்று புண்ட ரீகமால். (௧௬)

மன்னு நீதி கோடி டாத வைய மாளு மன்னவன்
றன்னை யும்ம றைத்தி றச்ச டங்க டங்க ளும்முடித்
துன்ன ருந்த வத்தி னூ யர்ந்த யாக முனியையு
மின்ன முண்டு கொன்ற தெந்தை யந்த கன்ற னேவலால். (௧௭)

ஆல நீழ றன்னின் மன்னு மழகின் மிக்க பழுதிலோர்
மேல்கு லத்து தித்த செவ்வி வேதி யன்றன் மாதைமுன்
னேல வேட னோர்சு கத்தை யெய்து கொம்பின் றூன்றதோர்
கோல னைத்து வீழ்த்தி யாவி கொண்ட தின்று கண்டனே. (௧௮)

மரணம் வந்த காற்று ரும்பும் வச்சி ரம்ம தாய்விடுங்
கருதி யிங்க தெங்ஙு னென்று காணின் முன்ன மன்னுமென்

பெரிய தந்தை யசனெ னுந்தொல் பெருமை மிக்க காவல
னுரிமை கொண்ட வடிவ மங்கை யுயிர்க வர்ந்த வாறுகேள். (கக)

வடிவ மிஞ்சு கவினி னிந்து மதியை ஞாலம் வெருவமென்
கொடியி லங்கு பூவின் மாலை வீழ வாவி கொண்டனன்
விடுவி டின்று கதையை யிந்த வெய்ய தேனு வான்மணந்
திடுமி லங்கு பிரம சாரி யினிமை கூரு முயிரினை. (உ0)

வேறு.

விரைவொடு சொடுபோ கேமேல் வெய்யநங் கூற்று வேந்தன்
பரிவுற முனிவ னென்று பன்முறை தம்மிற் கூற
வரமுனி யதிச யித்து வழுதிகே ளிவர்கள் சொன்ன
வருளிலா வுரைகள் கேட்டே னறிவதொன் றின்னு முண்டால். (உக)

இம்மண வாளன் மேய வின்னுயிர் மருப்பில் கோவாற்
செம்மையிற் கவர்வ மென்றூர் சிறிதுபோ திங்கு நின்று
மெய்ம்மையோ வன்றோ வென்று விளங்குவ மென்னக் கேட்ட
வம்மனு வேந்தர் வேந்த னதுதகு மென்று நின்றான். (உஉ)

நன்னெறிக் கன்னி மாதை நயந்துசைப் பிடியா முன்னந்
துன்னுபல் லியமு ழக்கிற் றும்பிடைக் கிடந்த தேனு
முன்னெழ வெருட்சி பொங்கி முளைத்தளை யறுத்து மொட்டை
மன்னிய சிரத்தான் முட்டிக் கொன்றது மன்ற லோனை. (உங)

வேறு.

அணிபொலி மறையவன் வீய வக்கண
மணமனை பிணமனை யாக மற்றவ
ணொன்றிய மனிதர்கள் கண்டு நாமொடு
தணிவற வரற்றினர் தலையை மோதினர். (உச)

உயிர்நிலை யாமையை யுணர்ந்து மன்னனும்
பயமொடு கூடினன் படரும் போயினர்
நயமுறு மாமுனி தெளிந்து நாவுறச்
செயிரற வழுத்தினன் றென்ன னீதியை. (உரு)

வேறு.

அரிய வெந்தை செயல்கண் டதிசயித் தந்த னன்றன் றெடுந்தன் னிடத்திடைப், பரிவி னேடு மடைந்தாங் கமைச்சனைப் பரிதித் தோற்றத் தழைத்துப் பழுதறத், தெரிய வோதிட யாமினி யிற்புக்க செய்தி யாவையுங் கேட்டருட் டென்னவ, தரும நூனெறி யாய்ந்திடு மன்னவர் தலைவ னீயல தில்லெனச் சாற்றினான். (உசு)

வழுத்த மைச்சனை நோக்கியின் றிங்கெனை வரிசை கூரப் புகழுவ தென்கொணி, ரிழுக்க தாமிப் பழிக்கஞ்சி நீக்கினன் யாவும் வல்ல வருட்சொக்க

நாயக, னழித்தி யாவையு மாக்கவல் லான்றன தருளை வாழ்த்து மெனவாழ்த்தி யேத்தினர், பொழிற்குள் வாழு மணிதருஞ் சுந்தரன் பொருவி னீதிகண் டேத்திப் புகழ்ந்தனர். (௨௭)

வேட னைச்சிறை விட்டவ னெஞ்சகம் விரும்ப வேண்டுப நல்கிநின் னுற்றவர், தேடு முன்னநீ போகெனப் போக்கியே தீதி லாத முனிக்குஞ் சிறப்புட, னாடி நன்மணஞ் செய்யென் றிரும்பொரு ணல்க வாங்கி நயந்து வியந்துபோ, யாடி நன்மணஞ் செயதொன் புதல்வரோ டருளை வாழ்த்தி யிருந்தன னந்தணன். (௨௮)

வேறு.

அத்தனப் படுப ழிச்சே யஞ்சியக் கணத்துத் தோன்ற
வுத்தமப் பத்தி மாறற் குணர்வுற வுணர்த்த லாலே
பத்தர்கள் பத்த னுக்குப் பழியஞ்சுஞ் சொக்க னென்றோர்
வித்தகப் பெரிய நாமம் விளங்கிய தவனி மீது. (௨௯)

வேறு.

மூட்டிப் பார்ப்பான் முறையீடு
மொட்டைப் பசுவின் பாய்ச்சலொடும்
விட்டுப் போன தெனவின்றும்
வட்டத் தலைத்து வழங்கியதே. (௩௦)

ஆகத்திருவிருத்தம் - ௮௪௮.

## ௩௪.—மகாபாதகந்தீர்த்த திருவிளையாடல்.

வளவியதோர் நன்னாட்டு முன்னோர் கால மாசிலா வுயர்மறையோன் றனக்கு மிக்க, விளைமைதரு பருவத்தே மனைவி யுண்டா யிவள்வயினோர் புதல்வன்விதி வசத்தாற் றோன்றி, யளியிழைற வளர்ந்தநங்க னேவா லேவுண் டன்புடைமா தாவைமன மருட்டிப் புல்ல, வுளமறிந்த தாதையவ மானவஞ்ச முணர்வுடையோர் விள்ளாரென் றொளித்துப் போந்தான். (௧)

பிறாறியி னிதிகுன்று மென்று கொண்டு பேணியுள மெலிந்திருப்போன் றனித்தோர் நாளிற், பொறையறியா மைந்தனுமா தாவுந் தம்மிற் புணருமிடத் தறியாது செல்லக் கண்ட, வுறுபுதல்வன் மண்வெட்டுங் கொட்டால் வெட்டா வுயிர்கவர்ந்தான் மற்றிதனை யோர்ந்து பார்ப்பி, னறிவிலிவேள் கொடுங்கணைபட் டிளைந்தார்க் கந்தோ வறமெங்கே நெறியெங்கே யன்போ வெங்கே. (௨)

மற்றவனுந் தந்தையுயிர் செகுத்த பின்னை வஞ்சமுடன் றற்சேர்ந்தார் தம்மைக் கூட்டி, யுற்றதுணை யானினிய பாலுஞ் சோறு முண்ணுங்கா லையில் விக்கிச் செத்தா னென்று, சற்றுமிரங் காதிருண்ட கங்குற் போதே தாழாம

லெடுத்தழலுந் தழலிற் சுட்டுப், பெற்றகொடும் பாவியொடு மில்லத் துள்ள பிறங்குபொருள் கவர்ந்தகன்றான் பெரிது தூரம். (௩)

ஆங்கொருவ ரறியாம லிரவிற் போங்கா லாறலைக்குங் கொடுவேடர் கண்டு சோர, வீங்கிவன்ற னுடல்புடைப்ப வடித்துக் கையி னிரும்பொரு ளுங் கவர்ந்தெழின்மா தையுங்கைக் கொண்டு, தாங்கருதி யேகினர்மற் றென்னே யின்று சாற்றுவது தலத்தின்க ணெவருங் காணத், தீங்ககல நினைப்பதொர்கா ரியந்தா னுகுஞ் சிவன்கொடுபோய் விடுவதொர்கா ரியந்தா னுமே. (௪)

ஆறிடையி லலறிவிழுந் தெழுந்து வெய்ய வரும்பாவி யடியுண்ட புண் ணீ மொய்ப்ப, வேறொருவர் துணையின்றிப் புழுத்துத் தானே விரித்தசிரத் தொடு ந்துணிக்கோ வணத்தினோடு, நாறுமுட லகத்தோடு மடவி தோறு நாணமின்றி மனைதொறுஞ் சென்று சென்று, சோறிரந்து தின்றுழன்று திரிந்தான் கண்டோர் சொல்லுகொடும் பாவியிவ னுரோ வென்ன. (௫)

தன்னுணர்வால் விதிவசத்தை நினைந்து நொந்து சார்ந்தபெரும் பாதகத் தைத் தணிப்பா னெண்ணி, முன்னருந்தீ வினைதீர்க்குங் கங்கை கன்னி முத லான தீர்த்தங்கள் விரும்பிப் போங்காற், பன்னெறிசேர் பிரமகத்தி பற்கடித் துப் பயமுறுத்திப் பின்றொடரப் பரிந்து பார்ப்பான், பின்னொருவர்க் காணான் முன் னதனைக் கண்டு பிரமிப்பன் வெருவிப்பன் முறைகம் பிப்பன். (௬)

ஆர்ந்தபெரும் புனற்றீர்த்தத் துறைசெ லுங்கா லாடாமற் புறத்தீர்த்துப் போடக் கண்டு, போந்தவனி யோரிடத்துந் தரிப்ப தின்றிப் புகழ்த்தாதை வதைபொருவில் கருணை யாயைச், சேர்ந்தகொடும் பாவமிரண் டானு நொந் து திரிதருவோ னெந்நாளும் யாவ ரேனுஞ், சார்ந்தவர்வெம் பாவங்க ணீக் குஞ் சொக்கன் றருகடம்ப மாவனத்தைச் சார்ந்தான் வந்தே. (௭)

நீக்கலரும் புகழ்க்கினியான் கருணை மெய்ய னீதிதிகழ் பதியினெறி வச த்தான் முன்ன, ராக்கியநற் றவத்தால்வந் தணையுங் காலை யங்கயற்கண் மங் கையைநல் லணிதி ருத்தி, நோக்கிநயந் துணைசெய்வா னுமையே மார னுவ லரும்பூங் கொடுங்கணையே தைத்தால் யாவர், காக்கவலா ரரிதரிதெவ் விட த்து மந்தக் கணைக்கிலக்கா காதாரு முண்டோ காணின். (௮)

மதன்கணையா னொந்தவன்றன் வனைந்த கற்பின் மனைவியின்க ணின் றானே னிரயங் காணு, னிதஞ்செய்பிறர் மனைச்சேறல் விரும்பி னுனே லினி மைதரு முயர்துறக்கங் காணுன் மற்றும், விதங்கடரு மநங்கனே யில்வாழ் வுக்கோர் வேராவா னுனலென் வரம்பி னில்லான், பதங்கொடுத்த நமையும் விடா னவனுக் கென்றும் பட்டகுணஞ் சுட்டாலுந் திரா தன்றே. (௯)

வேறு.

இன்னன சொல்லி நல்ல வினிமைகூ ரின்பந் துய்த்து
மன்னவீற் றிருக்குங் காலை வருபெரும் பாவி மன்னனிற்

வே று.

உன்ன ரும்பெரும் பாவ மொழித்தது
முன்னங் கண்டனிர் முக்கட் சிவனலா
லன்னை யொப்ப வணுக்கட்கு நல்லவர்
பின்ன ருஞ்சில ருண்டோ பிதற்றரே. (கக)

உருகாதநீச...........ஆணையால். [ந - ம் பக்கம் பார்க்க.]

ஆகத்திருவிருத்தம் - அகூஎ.

## ந௫.—அங்கம்வெட்டின திருவிளையாடல்.

தென்றிசையா ரிதியுடுத்த மன்னுமகட் கருந்திலகமெனு மதுரையின்கண் முன்னொரு காலம், பண்புடையா னொருதபனிக்கன் றொன்றி யெண்ணில் பத்தி மிகுந்த புதல்வர்க்குப் படைவித் தந்தசை, சொன்னடிறலா யுதக்கலைகள் பயிற்றி யங்க ளொருசாமப் பொழுதொழித்தா லயத்தி னண்ணி, வண்புகழ்சேர் சோமசுந்தரனு நாளும் வலஞ்செய்தன் பாற்றொழுவன் மற்றைப் போதும். (க)

எற்றிரு முடன்மூத்தோன் மனைவி தானு மிளமைதரு பருவத்தே சற்பான் மூத்தாள், மற்றவன்றன் கைப்பட்ட புதல்வ ரெல்லாம் வழிபாடு செய்தமக் கியன்ற தொன்று, குற்றமறக் கொடுத்தடைவிற் போதுங் காலக் குழுவின்கட் சித்தனெனு மொருவன் கூடாச், செற்றமொடு மனத்தொன்று வைத்து நாளுஞ் செய்தொன்று பின்றிரிவன் சிறந்தோர் போல. (உ)

தீயிலா வினிமைதரு முயர்ப ணிக்கன் றீங்கறியா னுதலினுற் றீமை கூறு, மேதிலா னுளக்கருத்தை யறியா னாகி யிட்டதிசைச் சொட்டைமுத லெண்ணில் கோடிக், கோதில்படைக் கலமுற்று மன்பு கூர்ந்து கொடுத்தனை யானொப்பமிரனக் கூற மண்ணிற், சாதனையா லெனைவெல்வா ரில்லை யென்று தனைவியந்தாங் காரித்துத் திரிவன் சால. (ந)

வே று.

என்றவங் கங்கள் வென்றே யிகல்படத் தானும் வேறோ
ரான்றவொன் கெருடி கட்டி யளவிலா மைந்தர்க் கூட்டித்
தோன்றமுன் சாதிப் பித்த றாநெறிச் சிரம நீதி
சான்றவ ராய மற்றைத் தயாவுளோர் கண்டு சீறி. (ச)

தூயதந் தலைவன் வல்ல வகைவிலா சானை நண்ணி
நாயனீ ரேநீ யொன்று மறிகிலீர் நம்மு ளோனை
நேயமி லாத வஞ்ச நெஞ்சகச் சித்த னீங்கித்
தாயமாய்க் கெருடி கட்டிச் சாதிப்பிக் கின்று னின்றே. (௫

என்றவர் கூறக் கேட்ட வினையிலா னவன்செய் குற்ற
மொன்றையுங் காணு னம்பே ரோங்கடி யார்க்கு நல்லான்
சன்றல்வேண் டாண மக்கோர் கருணையுள் ளானென் றூறி
நன்றிகூர் பணிக்கு மீந்து போதுநா ணஞ்ச நெஞ்சன். (௬)

நற்குரு மனைவி தன்னைக் கவருவா னயந்து கொண்டாங்
குற்றகா ரியத்தை யுள்ளத் தொளித்தொழுங் குள்ளான் போலப்
பொற்புறு மனைக்கண் வந்து நல்லன மொழிவன் போற்றி
மற்றவன் றனைக்கா ணுமேனல் வளஞ்சொல்வ னிறைஞ்சி மெல்ல. (௭)

நன்னுதன் மாத ராரே நாதரெங் கடைத்தா ரென்று
மின்னருண் மடந்தை சார்ந்த விவன்கருத் தறியா ளாகிப்
பொன்னெயி லால யத்துப் போயினார் போந்த தேதிங்
கென்னவாய் விடாமற் போவா னுடொறு மிடம்பெ றுமல். (௮)

மிண்டுறு கயவ னோர்நாள் வேதியரு வர்க்கா ணுமற்
கண்டயா தினைப்பி டிப்பக் கற்புளா ளாத லாலே
புண்டரு நெஞ்சத் தோடும் போயினு னதறி விட்டு
மண்டிய பயத்திற் போனுன் வஞ்சகக் கயவன் றானும். (௯)

பின்னவ மான வஞ்சம் பிறர்க்குரை யார்க ணல்லோ
ரென்றுமவ் வுரையை நோக்கி யேதமின் முல்லை வல்லி
தன்னுயிர்த் தலைவ னுக்குஞ் சாற்றிடா ளெங்கு முள்ள
வின்னெறிச் சொக்கன் றுனே யறிகுவ னெனவி ருந்தாள். (௧௦)

அடியவர் நன்மை தின்மை யறிபவ னறிந்தி ரங்கிக்
கடிதிவன் வடிவங் கொண்டு கயவனை நணுகிச் சொல்வான்
வடிவினை யவனீ யானே கிழவன்மா நிலம திப்பப்
படிமிசை மறுகி லேறி வெட்டவா பாடை கூறி. (௧௧)

நின்றனை வென்று யேனீ நினைத்தகா ரியம்ப லித்தற்
கின்றுகே ளைய மில்லை யிருந்திடு பேடி யாயி
னன்றியோ ராணை யாயிற் புறப்படு புறப்ப டங்சம்
வென்றியில் லானே யென்னப் புறப்பட்டான் வெகுளி பொங்கி. (௧௨)

பலகைவாள் கடிது வாங்கிப் படைக்கல வினைஞர் தம்மு
ளிலகிய வுலகத் தென்னோ டெதிர்ப்பவ ரில்லை யின்று
வலியிலாக் கிழவ னீயோ வெதிர்ப்பவ னென்று வஞ்சப்
புலையனு மெதிர்த்தான் மற்றோ ரெதிரிலாப் புனித னோடும். (௧௩)

கோதிலா மனப்ப ணிக்கன் குலத்தினைக் காக்க வேண்டி
வீதியி லேறி யங்கம் வெட்டுதற் கியைந்து நின்றான்

காத்திய புரங்க டந்தோள் கணைத்திடை வெட்டி வீழ்த்துத்
தீதட வல்லை னாகி யிருந்துமே செய்யார் னாகி. (௧௪)

வலம்படு நிறுத்தி னோடும் வந்திலை யாவ லத்தி
லிலங்குபத் திரத்தி னோடு மிடம்படு தடியி னோடுங்
கலங்கட வொட்டி முட்டிப் பிடித்தனன் கையும் வாளும்
விலங்கென மணிய ணிந்து மேதினி யதிச யிப்ப. (௧௫)

நாகமா புரத்து வாழ்வோ னல்லடி யார்க்கு நல்லோ
னேகநா யகனை ணிந்த வணியினுக் கிகல்வே றின்றிப்
போகெனிற் போகொ ணாதாய் வரவெனில் வரவொ ணாதா
யாகம்வேர்த் தஞ்சி நின்றா னங்கநூற் றெட்டும் வென்றான். (௧௬)

அஞ்சிய நெஞ்சன் றேறி யறிகிலேன் முன்போ லல்லே
னெஞ்சுளோ ரஞ்சும் வித்தை நீணிலத் தெங்கே கற்றாய்
மிஞ்சுபத் திரத்தோ டொள்வாள் வெட்டுவோ மென்ன விட்டுக்
கஞ்சவாள் பலகை வாங்கி நடந்தனன் கடுமை கூர. (௧௭)

இலகுவாள் விதிர்ப்பக் கண்ட விமையவ ரருளை வாழ்த்த
வுலகிலா சாரம் பேணி யுலாவிட வுணராச் சித்த
னிலமிசை யஞ்ச முட்டி வெட்டுவ னியமத் தோடும்
வலியநீ பார்த்துக் கொள்ளென் றிறக்கினான் வலிய தோர்கை. (௧௮)

செறுத்துமே னடத்தல் கண்டு சிறிதுமெய் வியர்த்துக் கம்பித்
தறுத்துளா னெவர்க்கு மஞ்சா னஞ்சினான் போன டித்தாங்
கிறுக்கின கைக்கு மாறா விட்டகை யிறக்கி முன்னங்
குறித்தவன் கொள்வ தான நிலத்தையுங் கொண்டு சொல்வான். (௧௯)

வழுத்தர நொட்பத் தூண்ட நூக்கமட் டயங்கு ளிப்ப
நடுவெழ வீசச் சாரக் கலப்பநேர் நடக்க முட்டக்
கடகுள கோச ரக்கை வெட்டவுட் கணக்கி லாதாய்
படிமிசை யலக்கை வீழ வெட்டுவல் பார்த்தி யென்றான். (௨௦)

இந்திர னயன்மால் சோம னெனவிசல் பேசி முட்டி
முந்துற வெட்ட வெட்டுங் கையினைப் பிடிப்பான் முந்தும்
வெந்திறற் பணிக்கன் கையை மீளவும் விட்டு வெட்டச்
சந்துடன் வீழ்ந்த வந்தத் தலத்திடை வாளுங் கையும். (௨௧)

கையற வெட்டா முன்னங் கட்டிய சொட்டை யாலே
வெய்யசொற் சொன்ன நாவை வினைவொடு மரிந்து நாளும்
பொய்ம்மைசெய் தொழுகு நெஞ்சைப் புரையறக் குத்திப் பத்திச்
செய்தியின் வணங்கி டாத சிரத்தையு மறுத்து வீழ்த்தான். (௨௨)

கண்டவர் பயந்த ணிந்து கடுமைகண் டதிச யித்து
வெண்டலை விருத்த ராயும் விளங்குநம் பணிக்கர் தம்மை
மண்டலத் தாரே யொப்பார் முற்றிவ ருருக்கொண் டெய்தி
யண்டர்நா யகன்வென் றானே யென்றுமுன் றெளித்தா னோர்ந்து. (௨௩)

வென்றிகொண் மைந்த ரெல்லாம் வென்றவர் தமைக்கா ணமற்
சென்றணி பொலியில் லத்துத் தேவியை வணங்கி வாழ்த்தி
வன்றிற லாத ரெங்கே போயினா ரென்ன மங்கை
கொன்றையஞ் சடிலச் சொக்கைக் கும்பிடப் போனா ரென்றாள். (௨௪)

அவ்வுரை தெரியக் கேட்டே யவரவர் முகமு கம்பார்த்
திவ்வுரைக் கேது வென்கொ லென்றுயங்கா விரும்ப ணிக்க
னவ்விசேர் கையி னானை நலந்தரு தாளி னானைச்
செவ்வியி னிறைஞ்சி வந்தான் செபவடக் கரமுந் தானும். (௨௫)

வந்தவன் றொழுது நின்ற வாயிலிற் றொகுந் கண்டிங்
கெந்துநீர் புகல்வீ ரெல்லா மிப்பொழு தணைந்த தென்ன
முந்துநம் முறைப்போல் வந்து முன்னைநம் பகைவ ராய
வெந்திறற் சித்தன் றன்னை வென்றன னொருவ னென்றார். (௨௬)

விரைவொடுங் களத்து வீழ வெட்டிடா மறைந்தோர் தம்மைத்
தெரிவுற வென்றீர் நீரென் றிருந்தனஞ் சிறியே மென்னக்
கருதியாங் கவன்முன் னுற்ற கருத்தறி யாமை யாலே
புரையிலா மனையிற் புக்கான் புகலவோர் மாற்ற மின்றி. (௨௭)

சித்திர மியைய கோலத் தேவியை வினவத் தேவி
பொத்திய செய்தி சொல்லிப் புனிதனே யென்றா னென்ன
மெத்திய பரிவிற் போந்து வெளிப்பட வெவர்க்குங் கூறிப்
பத்தர்கள் பத்த னெல்லா லாருளர் பழுது தீர்க்க. (௨௮)

மேவிய புதல்வீ ரென்று விளம்பியா லயத்து நண்ணித்
தேவதே வனைவ ணங்கிச் செப்புவா னொப்பி லானே
யாவிநா யகனே நின்பா லன்பிலா வென்பால் வைத்த
வோவிலா நின்பே ரன்பை யெப்படி யுரைக்கு மாறே. (௨௯)

கருதியென் றுயரையின்றென் குலத்தினைக் காக்க வேண்டிப்
பொருவின்மெய் கரந்து பொல்லாப் புலையனே னுருப்பு னைந்திங்
கரியபோ ரங்கம் வெட்ட வியைந்தனை யடிமை வேறு
தனைமிசை யின்மை யாலோ தலைவனே யெனத்து தித்தான். (௩0)

மற்றுமன் னவன்முன் னான மனிதர்கள் டதிச யித்துப்
பற்றிய வடியார் தம்மேற் பழுதுவா ரமற் காக்கு

முற்றவன் றன்னைக் கற்பார் மடந்தையை யுண்டென் றேத்தும்
வெற்றிகொள் பணிக்கன் றன்னை வியந்தனர் நயந்து வாழ்த்தி. (ங௧)

பணியடி யார்க்கு நல்லார் பத்திர மென்னுஞ் சொல்லு
மணிபொலி திறத்தி னோங்கு மழகிய சொக்க னென்னுந்
துணிவுடைத் தோலாக் கையுந் துளங்கிட வன்று முன்னு
விணையிலா வுலகத் தின்கண் வழங்கின வெவரும் போற்ற. (ஙஉ)

ஆகத்திருவிருத்தம் - அகூகூ.

## ஙசு—மதுரையான திருவிளையாடல்.

மன்னிய புகழ்க்க டம்ப வனத்திரு நகரி தன்னுட்
செந்நெறித் தத்த னென்னும் பெயருடைச் செழியர் கோமான்
றொன்னெறி மறைது திக்குஞ் சுந்தரற் கன்பு பூண்டு
முன்னமோர் காலந் தால முறைமையிற் பரிந்து காத்தான். (௧)

அறமலி வைதி கத்தி னருடரு நெறிபோ ருமற்
சறுவியாங் கதுகு லைப்பான் வேண்டுப கணத்தற் கூட்டி
மறமலி யமண ரெல்லா மந்திர வாதஞ் செய்தோர்
திறலுடை யரக்கன் றன்னைத் தோற்றுவித் தார்தி ரண்டு. (உ)

வெண்பிறை யெயிற்றுக் கொற்றக் கருநிற விரிசெங் குஞ்சிப்
பண்பிலா வரக்கன் றுஞேர் பாம்புருக் கொள்ளப் பாம்பு
விண்படர் வரைபோற் றோன்றி மேதினி நடுங்க நஞ்சங்
கண்பட விழித்துச் சீறி யெழுந்தது கனன்று பொங்கி. (ங)

செல்வமார் செழியன் மிக்க சிவபத்தி முதிர்வா னம்மைக்
கொல்லுமா றெண்ணி னுனீ கூசிடா தணுகி யாங்க
ணெல்லைமா நகரி யோடு முரனுடை யவனை நின்வாய்ப்
பல்லுற விழுங்கி டென்று பாம்பினை யேவி னார்கள். (௪)

தூவிட வெண்பற் செங்கட் கருநிறச் சுத்தத் தாத்திப்
பாவகப் பகுவாய் நாகம் படம்விரித் தடர்ந்து நீண்ட
வால்விதிர்த் துடன்மு றுக்கி வச்சிர விரட்டை நெட்டை
நாவசைத் துயிர்த்து ரத்திற் சேர்ந்தது நகரின் பாங்கர். (௫)

தானது கண்டோ ரோடித் தலத்துளோர் தம்மை யெல்லா
மூனுயிர் கொள்வான் கூற்ற மிணைந்ததோ வறியோ மோங்க
வானுறு வரைபோ லின்றோர் மாசுணம் வந்த தென்று
மீனவற் குரைப்பக் கேட்டு வந்தனன் விரைவிற் கூடி. (௬)

தெரிவுறத் தடுப்பான் வந்த தென்னவன் போகி நெட்டை
வரையுயர் வடிவங் கண்டீ தேதென மருண்டு நின்று
பெரியபாம் பணியுஞ் சொக்கப் பிஞ்ஞகா வென்று நெஞ்சத்
துரனொடுந் தியானித் தெய்தா னொருதனிப் பாணங் காண. (௭)

வாளர வதனைத் தாவி வருமுனங் கடிப்பத் தேறி
மீளவும் விட்ட கொற்றப் பஃறலை வெவ்வாய் வாளி
நீளுருச் சின்ன மாக வீர்ந்திட நீத்த மென்னக்
கோளழல் விடத்தை வாயா லுமிழ்ந்தது கொடிய நாகம். (௮)

கடியபாம் புமிழ்ந்த வேகக் கடுவிடம் பெருக்கா றாகிப்
படிபுகழ் நகரிற் சென்று பரந்திட வழலாற் றாமற்
குடிதழூஉ மன்னன் முன்னா மானிடர் குழறிச் சென்று
சடைமுடி யழகன் கோயி லடைந்தனர் சரண மென்று. (௯)

வேறு.

அரவா பரனே சரணஞ் சரண மடியார் துயரங் களைவாய் சரணங்
குருமா மதிசேர் சடையாய் சரணங் கொடுமா விடமுண் டவனே சரணந்
தரைநா யகனே சரணஞ் சரணந் தக்கோர் பரவுஞ் சொக்கே சரணங்
கருதார் புரமெய் தயனே சரணங் கருணா கரனே சரணஞ் சரணம். (௧௦)

பாரோர் பரவும் பரனே சரணம் பணிவா னவர்கட் கணியாய் சரணம்
வீரா விதழித் தாரா சரணம் மெய்யா வுழைசேர் கையா சரணந்
தேரா விருவர்க் கரியாய் சரணந் தெளிவா ரொருவர்க் கெளியாய் சரண
மாரா வமுதே சரணஞ் சரண மழகா வருளா கரனே சரணம். (௧௧)

மழுவார் படையாய் கொடுமால் விடையாய் வரிதோ லுடையாய் புடைமா துடையா, யழகா வென்றிப் புழகா வன்பர்க் கரியா யன்பர்க் கெளியா யிந்தத், தழலார் வஞ்சக் கொடுமா நஞ்சைத் தணியா யிங்குத் தணியா யென்றுய்த், தழுவார் தொழுவார் விழுவா ரெழுவா ரானார் சோர்வா ரானா ரவரே. (௧௨)

வேறு.

புகலென வந்து போற்றப் புண்ணியச் சொக்க மூர்த்தி
பகரரு மனிதர் முற்றும் படுந்துயர் தனையு மஞ்சச்
சகமிசை யேடு நஞ்சத் தடினிவெம் மையையுங் கண்டு
மிகவருள் சுரந்தான் கோனை விரைவினிற் றணிப்பா னெண்ணி. (௧௩)

சடைமுடி யமுத விந்து விந்துவைத் தெறித்துச் சார்ந்த
விடமெலா மதுர மாக்க வெப்பமுற் றடைந்தோர் யாற்று
ளிடரெலா நீங்கப் புக்காங் கின்பமெய் தித்தி ளைத்து
நடநவின் றார்க ளெந்தை பெருமையை நயந்து வாழ்த்தி. (௧௪)

திருவம ரருள்சேர் சொக்கன் றேவர்க டேவன் வெய்ய
வரவுமி ழால வாற்றை மதுரமாக் குதலா லாங்கு
வார்புகழ் பதிக்கு நாம மதுரைமா நகரி யென்றே
பரிவுற வன்று முன்னுப் பரந்தது பாரின் மீது. (கரு)

காவல னெய்ய வெய்ய கடுவிட முடியக் கக்கி
யேவொடு மறிந்து கம்பிக் கின்னுயிர் விட்ட பாம்பைத்
தேவியு நயப்ப மண்ணிற் றிருவிளை யாடல் காண
மாவளை யாக்க நாக மலையென வழுங்கிற் றன்றே. (கசு)

வேறு.

"விதுவரவ..................மதுரைநகரே" [இச்செய்யுளின் முழுப்பாகத்தை இப்புத்தகத்தின் கூ-ம் பக்கத்திற்பார்க்க.]

வேறு.

நாணறி லாதோர் மீண்டு நச்சரா மாண்டி மைப்பிற்
சேணுயர் விலங்க லாதல் கண்டும்பின் றெவ்வியா ராய்
மாணுடைத் தத்தன் றன்னை மதுரைமா நகரி யோடுங்
காணமுற் கொல்வோ மென்றுங் கயவர்கள் கழறிப் பேசி. (கஎ)

வேறு.

நறையி லங்க சோக நீழ னண்ணி யெண்ணி லாதவா
மறம விந்த சந்த மிஞ்சும் வஞ்ச மந்தி ரங்களா
லிறையி னம்பர் வெள்ளி வெற்பை யெள்ள வுள்ள மஞ்சவோர்
திறம்வி ளங்கு வலியி லங்கு தேறு வைப்ப டைத்தனர். (கஅ)

படைத்த வெய்ய பசுவை யீசர் பத்தர் வாழு மதுரையைப்
புடைத்த ழித்து மூங்கெ னப்பு கன்று போக விட்டனுங்
கடுத்த வெஞ்சி னத்தி றேடு கால மேக மென்னவே
யிடித்த திர்த்து சென்ற தெங்கி லத்த ரும்பெ ருக்கொள. (ககூ)

வேறு.

வெல்லருங் கோவைக் கண்டு வேந்தன்முன் றேர்ந்த நீங்கிக்
கொல்லொணுப் படையெ வர்க்கும் வெல்லொணு தென்று கொற்றத்
தொல்லையா லயத்துச் சென்று சொக்கனே யென்ன வெல்லாம்
வல்லநா யகனி தற்கென் செய்குவே மாற்றற் கின்றே. (உ0)

அறமறக் கொல்ல வந்த தாயினும் பசுவைக் கோறன்
மறைவழக் கல்ல வீரம் வாங்குத றகுமென் றெண்ணி
முறையிடு பயனைக் காப்பான் வரையென முன்கி டந்த
துறலுடை யடல்வெள் ளேற்றை யேவினன் றேனு மீது (உக)

படிமிசை யெவருங் காணப் பாற்கடல் கிளர்ந்த தென்ன
விடைவிடை கொண்டெ ழுந்து வெள்ளிமால் வரைமீ தேற

விடிதரு பெரிய வெள்ளை யிகலுடைக் கடிய மேக
நடையொடு செல்வ போலச் சென்றது நாசி மூசி. (௨௨)

வாவுறு வடிவா னேற்றைக் கண்டபோ தேம யங்கி
மேவுவீ ரியத்தை யெல்லாம் விட்டிணை விழியை மூடி
யாவுரு நடுங்கி வீய வார்த்தெழுந் தகிலத் தோர்க
டேவதே வனைத்து தித்தா ருறுபயந் தீர்ந்து தேறி. (௨௩)

தாருறு நெடிய சேவாற் பேருடற் றழைந்த தாடிக்
கூரிய பெரிய கோட்டுக் கோவுயிர் விட்ட பின்னர்ச்
சீரிய பிறங்க லாக்கித் திருவிளை யாடல் காணப்
பார்மிசை வழங்கு வித்தான் பசுமலை யென்ன வாங்கு. (௨௪)

மந்திர வாதஞ் செய்த மானமில் சமணர் தந்தம்
வெந்தசந் தங்க ளோடும் போயினர் விளிவோ டஞ்சிச்
சிந்துரத் துங்கச் செங்கட் பெருந்திமிற் றிரண்ட நேர்வாற்
சந்திரப் பகிர்ம ருப்புச் சுந்தரத் தரும வேறு. (௨௫)

கொடுந்தலை மேரு வெற்பைக் கோட்டுமண் கொண்டு வெய்யோ
னெடுங்குமால் வரையின் பான்மேய்ந் துதயமால் வரையிற் றுவி
யடுங்கட லேழு நீருண் டவனிகாற் சிறைகொண் டப்பா
லிடங்கொள்பே ரண்ட முட்ட விட்டிறுத் தட்ட தாங்கு. (௨௬)

வினையற வந்தி றைஞ்சு மெழின்மழு விடையை நோக்கி
மனமகிழ்ந் தனிக ளோடு மதிதவ ழுயர்பி னோடு
மினிமையிற் கிடத்தி நாம மிடபவெற் பென்னப் பேர்ந்த
தனுவொடுங் கிடந்த தோங்கத் தண்டலை மலைய தாங்கு. (௨௭)

ஆங்கது கண்டோ ரெல்லா மதிசயித் தருளை வாழ்த்தித்
தாங்கரு முவகை கூர்ந்தார் தனிவிளை யாட றன்னைப்
பாங்குமைக் கருளிச் செய்து பத்தர்கள் பத்த னங்க
ணீங்கரும் விடையை நோக்கி யிருந்தன னேசங் கூர்ந்தே. (௨௮)

ஆகத்திருவிருத்தம் - ௬௨௭.

---

## ௬௭.—வெப்புத்தீர்த்த திருவிளையாடல்.

ஞான முற்றிய வெற்றி கொ ணற்றவர்
பானி றத்திரு நீறு பரப்பியே
மீன வற்சுடு வெப்ப மொழித்துறு
கூனி மிர்த்த திருக்கதை கூறுவாம். (௧)

வேறு.

நன்னெறிசேர் காவிரிசூழ் நன்னாட்டு முன்னொருகாற்
பன்னிரண்டு பெயருடைய செழும்புகலிப் பழம்பதியுண்
மன்னுமறை யோர்குலத்து வைதிகவா ரணமென்றோர்
கன்னன்மொழிப் பாலகனார் கவுணியகோத் திரத்துதித்தார். (௨)

பானலங்கட் கவுரிமுலைப் பாலமுது செய்தருளி
யூனமிலா வருங்கலைக ளோதாம லுணர்ந்துயர்ந்த
ஞானநிறைந் தரும்பதிகம் பாடிமறை நாடரிய
மானமர்கை யான்மாட்டு வரிசைகள்வேண் டுபெற்றார். (௩)

அன்புடைநா வுக்கரசோ டாதிமறைக் காட்டெய்தி
நன்புறுகா விரிநாடு திருநீறு நனிவிளங்க
மன்புகழ்சேர் புனல்வையை வளநாடு சமணர்களாற்
றுன்புறுமென் றேனோருஞ் சொல்கின்றா ரென்றழுங்கி. (௪)

சாதிமுறை யறியாத சமணர்வழி யொழிவித்தே
யாதரவி னமைந்த நாட்டனாகி யஞ்செழுத்தும்
வேதநெறி யுஞ்சால விளங்குவிக்க வேண்டுமென
வோதரிய திருவுள்ளத் துணருங்கா லிறையருளால். (௫)

மன்னமைச்சன் குலச்சிறையும் வளவர்கோன் றிருமகளார்
தென்னவன்றன் மாதேவி திருவுடைமங் கையர்க்கரசு
முன்னரிய சிவபத்தி முதிர்ச்சியினா லொளித்தோலை
யின்னல்கெட விடுத்தாரங் கெய்தியவா றதுகேட்டு. (௬)

வேறு.

அருண்ஞான சம்பந்தர்க் கடிமை யாற்றா வலைமாணி குலச்சிறையிண்ணைப்ப மின்று, பெரியோராற் றிருவுள்ளப் பெருமை கேட்டேம் பேசரிய திறத்தமணர் தம்மை முற்றும், விரைவாக வெழுந்தருளிக் கோறல் வேண்டும் வெண்ணீறு மஞ்செழுத்தும் விளங்க விங்குப், பரிவோடு மெழுந்தருளா தொழியி னாடு பறிதலைய ராற்சாலப் பழுதா மென்றே. (௭)

வேறு.

சென்ற வோலையின் செய்திகண் டின்புறா
நன்றி கூர்தரு ஞானசம் பந்தரும்
வென்றி யாலவாய் மெய்யனை வாழ்த்துதற்
கின்று கால மெனவொருப் பட்டனர். (௮)

சார்ந்த நாவுக் கரசுந் தவாநலஞ்
சேர்ந்த மாந்தருஞ் செந்நெறிப் பாலரே
வாய்ந்த நாட்டிதி வாரம்பொல் லாவெனச்
சூழ்ந்து பன்முறை சொல்லி விலக்கினார். (௯)

என்னை யாளுடைச் சொக்கை யிறைஞ்சதற்
குன்னு நெஞ்சுடை யேறுக் குணர்வுளிர்
புன்மை நாளும் புனிதமா மென்றுயர்
நன்மை யாப்பு நவிலுவா ரின்புற. (௪௦)

## வேறு.

எயுற வச்ச முற்ற மாந்தர்க ளினிமை கூரப்
போயுறு காரி யங்கள் பலிப்பதன் பொருட்டு முன்னர்
வேயுறு தோளி பங்க னென்றுயர் மேன்மை கூர்ந்த
பாயிரப் பதிக மோதிப் புறப்பட்டார் பரிய யாரும். (௪௧)

மெய்திக ழப்பர் தம்மை விடுத்தியன் மதுரை நோக்கி
வைதிக நெறியைக் காக்க மானமில் சமணர்க் காயப்
பொய்யிலா ஞான யானை மதம்பட்டுப் போகா நின்ற
தையம தில்லை யென்ன வறைந்தன காக ளங்கள். (௪௨)

கழுமலப் பால னேனை கருணைகூர் மானி யோடு
விழுமிய வமைச்சன் காண்க மேதினி முழுது மெச்சக்
குழுவமண் குண்டர் தம்மைக் கூரிய கழுவி லேற்றி
வழுதிநா டடைய நீறு பரப்பிட வருகின் றேமால். (௪௩)

## வேறு.

ஐயமிலை யென்றினிய திருமுகத்தை முன்னடைந்தோர்
துய்யகரம் விடுத்தடைந்த தொண்டர்குழாஞ் சூழ்ந்தேத்தச்
செய்யபுனற் காவிரிசூழ் சென்னிவள நாடகன்று
வையைநதித் தென்பாண்டி நன்னாடு வந்தடைந்தார். (௪௪)

எந்துமறை வேந்தர்திருப் புத்தூ ரிறைஞ்சிமதி
தோய்ந்தகொடுங் குன்றந் தொழுது திருப்பதிகஞ்
சேர்ந்திசையின் வானிற் பொலியென்று தேர்ந்தோதுப்
போந்துமது ராபுரியி னெல்லை புகுந்தனரால். (௪௫)

## வேறு.

மல்லல்சேர் நகரத் தேயெண் வரையகத் தமணர் முற்றுஞ்
சொல்லருந் தீக்க னுக்க டுன்னிமித் தங்கள் கண்டு
வெல்லரும் பகையுண் டாகு மென்றவர் வெருக்கொண் டுள்ளத்
தொல்லையின் மன்னன் பாற்சென் றுரைசெய்வார் பரிசி மெல்ல. (௪௬)

பிண்டிவே ரற்று வீழப் பிரம்புநேர் பிளப்பக் கையிற்
குண்டிகை யுடையப் பாய்முக் குடையுகக் கழுவா [illegible]
கண்டனங் கொடுங்க னுத்தோள் கண்ணிடக் தாடிக்கு [illegible]
[illegible] கூகை [illegible] குழறுங் காலை. (௪௭)

நின்னதென் றறியே மென்று மெனவஞ்சா வரச னஞ்சித்
துன்னியோர் தமைவி டுத்துத் துயருறத் திருமு கங்கண்
டின்னநீர் மானி யாரு மின்புறு மமைச்ச ருரு
நன்னிமித் தங்கள் செய்யக் கண்டுள நனிந யந்தார். (௧௮)

இந்தவா றுறுங்கா லங்க ணினிமையிற் சிலர்வந் தெய்தி
மந்தர முலையி னார்க்கு வைதிக யானை நந்தஞ்
செந்தமிழ் நகரின் பாங்கர்ச் சேர்ந்ததென் றுரைகை கூறத்
தந்திர வமைச்ச னாரை யேவினார் தயாவு கூர்ந்து. (௧௯)

ஆண்டுமுன் சென்று காணு மறிவுடை யமைச்ச னார்முன்
பூண்டபே ரன்பு நீடப் புளகெழ வுடல்கம் பிப்ப
வீண்டுகண் ணருவி சோர வெதிர்துதித் திறைஞ்சி வீழ்ந்தார்
காண்டகு பிள்ளை யாருங் கண்டெடுத் தணைத்தார் வாழ்த்தி. (௨0)

முதிருமா மறைமு ழங்க முத்தமிழ் வாணர் போற்றக்
கதிர்விடு முத்தக் கொற்றச் சிவிகைமேற் கவிகை துன்றப்
புதியசா மரையி ரட்டப் பொருவரும் வாது காண்பான்
றுதிசெய்து வந்த வானோர் சூழ்ந்தலர் மாரி பெய்ய. (௨௧)

வே று.

சுரருலகு புகவொலிக்குந் துன்றுசெழுங் காகளங்கள்
பரசமய கோளரிவந் தானென்று பணிமாற
வரிசைகள்கொண் டெதிர்கொண்ட மாமறையோர் குணலையொடும்
பொரியலர்சிந் திடத்தொண்டர் போற்றிசய சயவென்ன. (௨௨)

வே று.

அதிர யாமுழ வருடரு மிருடிக ளார்த்துத்
துதியி னேத்திடச் சாத்திய சுட்டிநீ றிலங்க
வெதிரி லாதசெம் பவளவெண் ணகைநிலா வெறிப்பப்
பதியின் மேவினர் நித்திலப் பந்தரி னீழல். (௨௩)

வே று.

அறமுறநன் னியஞான முனிவரள விடவொண்ணா
மறுவிலுயர் கோபுரம்பொன் மதிலிலங்கு நகர்கண்டிங்
கிறைவர்திரு வால்வா யெம்மருங்க தெனுமளவிற்
றுறவுநெறி தரும்பெரிய தொண்டரர கரவென்றே. (௨௪)

மாசறுபூம் பொழில்புடைசூழ் மதில்வாள கிரிகாட்ட
வீசுகொடி விசும்பளப்ப விண்ணவர்சூழ் மேருவெனத்
தேசொடுவான் முகடுதொடுஞ் செழுமணிக்கோ புரமிலங்கு
மீசனுறை திருவால வாயிதுவே யெனக்காட்ட. (௨௫)

வே று.

மாசில்கை கூப்பிக் கண்டுமுன் பதிக மங்கையர்க் கரசியென் றெடுத்துக்
கூசியா லயத்துச் சென்றெழுநிலைசேர் கோபுரத் தணைந்துவீழ்ந் திறைஞ்சிப்
பேசருந் துதியால் வலஞ்செய்துட் புகுந்து பெருங்கவிப் புலவனைக் கண்டு
நேசமார் விதியின் வணங்கியொண் பதிக நீலமா மிடற்றென வெடுத்தார். ()

வே று.

உளநெ கிழ்ந்திட வொழிவிலா விழிபுனல் சொரியப்
புளக மேவிடப் பொடியணி மெய்விதிர் விதிர்ப்பக்
கிளர வோதிடுங் கீதவொண் பவளவாய் குழறக்
களிகொள் வேதியர் மூழ்கின ரானந்தக் கடலுள். (௨௭)

போது மெல்லையிற் புகழுடைச் செம்பியன் மகளார்
காது நெஞ்சுடைக் காரமண் குண்டர்க டம்மை
வாதின் வெல்லுவான் பிள்ளையார் வந்தன ரென்றே
யாதி யாலவாய் மெய்யனை வணங்கவென் றடைந்தார். (௨௮)

வந்து காதலிற் பிள்ளையார் மலரடி வணங்கிச்
சந்து மேவுடல் புளகெழக் கண்ணினீர் ததும்பச்
சிந்தை யன்புறக் கண்டுநின் திருமுகங் காண்பா
னெந்தை யேயென்ன புண்ணியஞ் செய்தன னின்றே.

வே று. (௨௯)

மையறுகற் பகக்கன்றே வரையரையன் திருமகளார்
துய்யதனத் தமுதுண்டு சோதிவிடு மணிவிளக்கே
மெய்முகிலே தமிழ்க்கடலே யருட்குன்றே மேதினியோர்
செய்தவமே மறைப்பயனே செழும்பதுமப் பதம்போற்றி. (௩௦)

வே று.

என்று போற்றிட விரக்கமுற் றருமறைத் தலைவர்
மன்ற லங்குழற் பாண்டிமா தேவிகேண் மகிழ்வி
னின்று வந்தன னின்பரி வாலென நயந்தாங்
கொன்ற வேண்டுப நல்கிமுன் போயின ரொல்லை. (௩௧)

வே று.

இன்னருள்சே ரமைச்சனு ரிடங்காட்டப் போந்தினிய
தொன்னெறிசேர் வாகீசச் சுவாமிமடத் தவதரிப்ப
வன்னதுகேட் டிருஞ்சமணர் திரண்டறிவான் விடுத்ததிறன்
முன்னிகழொற் றினர்சொல்ல முட்டுச்சஞ் சலமுற்றார். (௩௨)

வே று.

விட்ட வாறது கேட்குமுன் வெய்யவாழ் கினைற்றுட்
கட்டி வீழ்ந்தனர் சிலர்சிலர் களத்திடைக் கயிறுங்

கிட்டு ஞான்றனர் சோர்ந்தன ரெட்டிதின் றசோகின்
முட்டி மாண்டனர் புரத்தமண் குரத்தியர் முடிய. (௩௩)

மதியி லாதவ ராங்கது கண்டுளம் வாடி
யெதிரி லாதநஞ் சமயமின் றிறந்தது விரைந்தே
முதிரு முன்னர்யா மொழிகுவம் வழுதிமாட் டெனவே
யதிர்வி ஞேடுசென் றுரைசெய்வா ரரசனைப் பரசி. (௩௪)

## வேறு.

மறைஞானி யென்பானேர் சோழியவை திகச்சிறுவன் மதுரை மேவிப்
பொறையாருஞ் சுந்தரன்ற னடிவணங்கித் தானறிந்த புதுமை கூர்ந்த
வறமாருந் தமிழ்பாடி யருவிவிழி யொடும்புளகத் தோடு நின்று
துறையாரும் வாகீசச் சுவாமிமடத் தவதரித்தான் சுருதி பாடி. (௩௫)

மன்னவகேண் மதியாநிந் நகர்வந்தா னவனம்மை வாதின் வெல்வா
னிந்நகர்வந் ததுகண்டே யேதேரு முட்டானே மென்னக் கேட்கு
மன்னவனு மடிகளே யான்கேட்டு முட்டென்ன வருக ரெல்லா
மின்னழலை மந்திரித்து விடுத்தேக விடுவமுள மெலியே லென்றார். (௩௬)

செந்நெறியி னுற்றதுசெய் தோட்டுமெனக் கேட்டெழுந்து சீற்றத் தேகி
வன்னியைமந் திரித்தேவச் செல்லாது நின்றுழன்று மறுகக் கண்ட
பின்னரிவன் சிறியனலன் பெருநெருப்பை யிடுவமெனக் கங்குல் போர்முன்
மன்னுமடத் தெரியிட்டார் தங்கள்வயிற் றெரியிட்டார் மறைந்து சென்றே. ()

## வேறு.

இங்கது காணு முன்ன ரெங்குமாஞ் சொக்கன் மங்கை
தங்கிய வங்கங் கம்பித் தெரிதரு தழல்சு டாம
லங்குமுன் சென்று காப்ப வருந்தமிழ்க் காழி வேந்தர்
தங்கிய தறியா ராகித் தனியணைப் பள்ளி கொண்டார். (௩௮)

காதல்சே ரடியார் சூழ்ந்து கைவிதிர்க் கொண்டு ணர்த்த
நீதியி னெழுந்தி தற்குக் காரண நிருப னென்றே
நாதனை நினைந்து மானி மங்கல நன்ஞண் பார்த்தாங்
கோதினூர் செய்ய னேயென் றுயர்திருப் பதிக மோங்க. (௩௯)

## வேறு.

சண்பை நாயக ரேவிய தழலிறை யருளாற்
றொண்டர் வாழ்திரு மடத்தினைச் சுடாதுபோய் விரைவிற்
குண்டர் கேள்வியான் கூனுடை மீனவ னுடன்மேன்
மண்டி வெப்பென வருத்திய தியாவரும் வருந்த. (௪0)

வரிசை நீடிய ராடக மாளிகைப் புறத்து
விரைகொள் சோலையும் வெஞ்சுருட் கொண்டது வெப்பாற

வாலவாய்ச், சொக்கன்", "தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச், சொக்கனே." (திருநா. தேவாரம்.)

உ௫ - உசு.) "வேதியன் படைக்க மாலவன் காக்கப், பெருந்தோர் திருவுருத் தான்பெரிது நிறுத்தி,யமுதயில் வாழ்க்கைத் தேவர்கோ னிமிழ்ச்சிய, மதமலை யிருநான்கு பிடர்சுமந் தோங்கிச், செம்பொன்மணி குயிற்றிய சிகரக் கோயிலு, ளமையாத் தண்ணளி யுமையுட னிறைந்த, வாலவா யுறைதரு மூல காரணன்." கல். ௩உ,)

உஅ. திறலுடையவனைக் கொன்ற பாவம் - வீரகத்தி; உ: "மேதகு வீரமிக்க விருத்திரா சுரனைக் கொன்ற, வோதரும் பழியால்." காணுர் - விளங்க அறியார்.

உகூ. ஆரா - தணியாத.

உகூ-௩0. "காருடற் பிறையெயிற் றரக்கனைக் கொன்று, வச்சிரத் தடக்கை வரைப்பகை சுமந்த, பழவடற் காட்டுந் தீராப் பெரும்பழி, பனிமலை பயந்த மாதுடன் தீர்த்தருள், பெம்மான்." (கல். க.)

௩க. வாரம் - கிழமை.

௩உ. (திருவிளை. தீர்த்த. கக.)

௩௩. சித்திரைச் சித்திரைத்தினத்து - சித்திரைமாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில். ஒப்பிலழகன் - சுந்தரேசர்.

௩௪. நிறைவு - மகிழ்ச்சி; (உ) உ.

உ - ம் திருவிளையாடல்.

க. களிகள் - யானைகள்.

உ. பொருவுதல் - பொருந்துதல். முன்னைத்தவம்.

௩. தும்பை இபக் கடவுளை-தும்பைமலர்போன்ற வெண்மை நிறம் பொருந்திய தெய்வயானையை. கோ - அரசன்; இந்திரன். புந்தியினிமை - மனமகிழ்ச்சி. கந்தம் - கழுத்து.

௪. இயம்பக்கேட்டருளாய். உபகாரம் - கையுறை; காணிக்கை.

௫. சுந்தரவடிவ, விளி; (௫) ௩.

௬. தோன்றி நின்ற மத்தகம்.

௭. வாங்கித் திகைத்தேன்.

௯. பூழியன் - பாண்டியன். வளை - ஒருவகை ஆயுதம். தேவர் கோன், விளி. எற்றுண் - அடிக்கப்படுவாய்; (கடம்ப, இலீலா. உ.)

க0. அவமதியினுற் காட்டு யானையாகி உழல்வாயாக.

கக. பிறிது சாபம் - சாபத்தின் பரிகாரம்; க௩; இது, 'மறுசாபம்' எனவும் வழங்கும்; (௫அ) அ: "மறு பெருஞ்சாபமுங் கொடுத்தான்."

க௩. அருந்தவன்-சிவபெருமான்; "தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே." (புறநா. க.) தரம் - தகுதி.

க௪. உதரநெருப்பு - வயிற்றுத்தீ; ஜடராக்கினி.

க௭. பழுது - சாபம்.

௩ - ம் திருவிளையாடல்.

க. மலயத்துவசன் - பொதியின் மலையின் உருவமெழுதிய கொடியை யுடையவன்; (௪) க. இப்பாண்டியன் அகத்தியமுனிவர் அருளாற்பிறந்தவனுதலின், அவருக்கு இருப்பிடமாகவுள்ளதும் துவசம்போலே உயர்ந்து தோன்றுவதுமாகிய பொதியின் மலையின் சம்பந்தமான பெயர் இவனுக்கு இட்டனரென்று அஷ்டமிப் பிரதக்ஷிணமான்மியம் தெரிவிக்கின்றது.

உ. ஏலம் - மயிர்ச்சாந்து. குழற்கா - கூந்தலாகியசோலை. பரிந்தான் - அன்புற்றான்.

௩. ஆதிமரபு, மரபின்பெயர்; சூரியவம்சமென்று கருதற்கும் இடமுண்டு. வடிவமங்கையென்பது அப்பெண்ணின்பெயர்; (க௪) ௩.

௪. முற்றுதல் - வளைதல்.

௫. ஆல், ஒடு.

௭. இணையிலான் - சிவபெருமான். ஏதம்-துன்பம். ஆரும் - ஆருவாள்.

அ. மிகை - அதிகம்.

௯. அவர் இயைந்து. தொல்லைத் தந்திரம் - பழமையாகியநூல்; வேதாகமங்கள்.

க0. வாரித்தலம் - பூமி.

௧௨. முகுத்தம் - முகூர்த்தம். அன்றினர் - விரோதித்தவர்கள்; அன்றினர் சிங்கம் - மலயத்துவசன். முடி - தலை, கிரீடம்.

௪ - ம் திருவிளையாடல்.

௧. மலைக்கொடிமன்னன் - மலயத்துவச பாண்டியன்; "எருதோடு கலையோடு சிலையோடு மலையோட விபமோட நேர், விருதோடு பொருதேறு புலிநேமி கிரிசூழ விளையாடவே" என்னும் தக்கயாகபரணியும், 'பருவதத்தைக் கொடிக்கணெழுதும் பாண்டியன் குலபதி இலாஞ்சனையும்' என்னும் அதன் உரைப்பகுதியும் இங்கே அறியற்பாலன.

௩. வெந்திட - புறங்கொடுக்க; வெரிந், விகாரம். திசைவிசயம் - திக்குவிசயம்.

௫. மதுரைமன்னன் - சோமசுந்தரக்கடவுள்; (௬) ௭. தாள்வரை - மலையின் அடி; 'பாதசயிலம்' என்பர்வடநூலார். மதுரைமன்னன் இருந்தான்.

௬. கொம்மை - வட்டம்.

௭. துற்று - நெருங்கி. மிண்டுகள் - தருக்காற் சொல்லும் சொற்கள். சண்டவெங்கோபம் - மிக்க கோபம்.

௮. ஞாட்பு - போர்க்களம்.

௯. கண்டது இல் - பார்த்ததில்லை.

௧௦. அஞ்சல் - அஞ்சற்க.

௧௧. வரை வில் - மலையாகிய வில். புரிகுழல், எழுவாய்.

௧௨. இருமை-பெருமை; (திருநக. ௧௬.) மந்திரி, எழுவாய்; அவன்சொல்லியதை, (௩) அ - ம் செய்யுளாலுணர்க.

௧௩. முறுவல்செய்தவர், சிவபெருமான்.

௧௪. முகுளம் - அரும்பு.

௧௭. பயந்தவட்கு - தாய்க்கு.

௧௮. சுபகாலங்களிற் பூரணகும்பத்தின்மீது கமுகம் பாளைகளைச் செருகிவைத்தல் மரபு; "கீழ்பாற் றிசையின் மிசைவைத்த, வெள்ளிக்கும்பத் திளங்கமுகின் பாளை போன்று விரிந்துளதால்." (கம்ப. பாலு. மிதிலை. ௭௨.)

௨௧. ஆலவட்டம் - விசிறி. இரட்ட - மாறியசைய.

௨௨. குணலை - ஒருவகைக்கூத்து; அது, பல்வரிக்கூத்தைச் சார்ந்தது. சொன்னநாள், பங்குனி உத்தரம்.

௨௩. துகிலும் குழையும் இலங்க. வாசிகை - கோத்தமாலை.

௨௪. மதிநெறி - சந்திரகுலம்.

௨௫. நாரதாதிகள் கானத்தைப்பாட. மைந்தன் - முருகக்கடவுள்; இவர் திருமணச்சடங்கு நடத்தியதை, "மருளாரும் பவத்தொடரை மாற்றிய தென் னன்மகளாய் மவுலிசூடிப், பொருளாரும் புவிவிசயஞ் செய்தரசு செலுத்தியமும் முலைப்பூந் தேனைத், தெருளாருந் தமிழ்மதுரை நாதன்மணஞ் செயவிதிநூற் சடங்கு செய்தே, யருளாருங் கடம்பவனத் துறைகுமர குருபரனை யகத்துள் வைப்பாம்." (கடம்ப. பாயிரம், ௫.) என்னும் திருவிருத்தத்தாலுமுணர்க. இதுபற்றியே, 'சடங்குக்கந்தன்' என்பர்பின்னும்; (௭) ௯.

௨௬. "நான்கெயிற் றொருத்தற் பிடர்ப்பொலி வரைப்பகை, யறுகால் குளிக்கு மதுத்தொடை யேந்த, முட்டாட் செம்மலர் நான்முகத் தொருவ, னெண்ணிநெய் யிறைத்து மணவழலோம்பப், புவியளந் துண்ட திருநெடுமாலோ, னிருகர மடுக்கிப் பெருநீர் வார்ப்ப, வொற்றை யாழியன் முயலுடற் றண்சுட, ரண்டம் விளர்ப்பப் பெருவிளக் கெடுப்ப, வளவாப் புலன்கொள் விஞ்சைய ரெண்மரும், வள்ளையிற் கருவியிற் பெரும்புகழ் விளைப்ப, முனிவர் செங்கரஞ் சென்னியாக, வுருப்பசி முதலோர் முன்வாழ்த்தெடுப்ப, மும்முலை யொருத்தியை மணந்துல காண்ட, கூடற் கிறைவன்." (கல். ௩௪.)

௨௭. "பெருநீர் வையைவளைநீர்க் கூட, லுடலுயி ரென்ன வுறைதரு நாயகன், கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி, யைவாய்க் காப்புவிட் டணிபூ ணணிந்து, விரிசடை மறைத்து

மணிமுடி கவித்து, விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடியெடுத்து, வழுதியாகி முழுதல களிக்கும், பேரருளாளன்.'' "மதுரை மாநகர்ப் பூழியனாகிக், கதிர்முடி கவித்த விறைவன்." (கல். உ, உ௫.)

உஎ. எழுத்து-கையொப்பம். சோமசுந்தரக்கடவுள், பாண்டியராசாவாக வீற்றிருந்தபொழுது, 'சுந்தரமாறன்' என்று கைச்சாத்திட்டருளினர்.

உஅ. இருக்கு - வேதம். "மதிக்குலம் வாய்த்த மன்னவனாகி, மேதினி புரக்கும் விதியுடை நன்னாள், ணடு லூர் நகர்செய் தபெவந் துடைக்கு, மருட்குறி நிறுவி யருச்சனை செய்த, தேவர் நாயகன் கூடல் வாழிறை." (கல். ௬௬.)

### ௫ - ம் திருவிளையாடல்.

க. ஆகண்டலன் - இந்திரன்.

உ. சடங்கு - நித்தியகன்மம். அநந்தமாமுனிவர் - பதஞ்சலிமுனிவர்.

௩. எத் தரும் - மேன்மையைத்தரும்; துதித்தற்கரியவென்றுமாம்.

௪. நீபமாவனம் - கடம்பவனம். இருந்தது, அளவில்கால முன்பு. பணிந்து அளித்த.

௫. சொக்கத்தாண்டவமென்பது, சாந்திக்கூத்தின்வகையினுள் ஒன்றான சுத்தநிருத்தம்; சுந்தரதாண்டவமென்றும் கூறப்படும். இது, நூற்றெட்டுச்சரணமுடைத்தென்பர்; (சிலப். பக்கம், ௬௪.)

எ. கஞ்சுகம் - சட்டை. இதஞ்செய் அசஞ்சலன். உளம் நிறைஞ்சு - மனமகிழ்ந்து.

### ௬ - ம் திருவிளையாடல்.

க. நன்கு - இன்பம்.

உ. உடு - நட்சத்திரம்.

௩. இவ்வரையென்றது, சோற்றுமலையை.

௪. முதுமடைநூல்-முதிய பாகசாஸ்திரம். தெய்வவான் வழுதி, விளி.

௫. தேவ், விளி.

௬. சொன்றி - சோறு. பூதம் அனைந்தது.

எ. எண்மை - எளிமை.

௯. மிதவை - சோறு.

### எ - ம் திருவிளையாடல்.

க. துய்த்தும் - உண்டும். குறள்பூதம்; தனு - உடம்பு.

உ. அடுக்களை - மடைப்பள்ளி. அற - மிக. ஆவி - புகை.

௩. ஈறு - பூமியின்கீழெல்லை.

௫. பரிதாப வெப்பம் - மிக்கவெப்பம். அமராமல் - அடங்காமல்.

௬. எழ - மிக. வேகவதியாறு-வையைநதி.

எ. சென்றநீர் - கிழக்கேசென்ற வெள்ளம். மண்டுறு நீர் - மிக்கு வரும்வெள்ளம்; மண் தூறுநீர், மண்ணிலே ஊறுகின்றநீருமாம்.

அ. ஆரவும் - உண்ணவும். அயினி. சோறு.

௯. கண்டது - செய்தது. பந்தையும் நீராவியையுமுடைய வாவி.

க0. காவணம - பந்தர்.

கக. ஓலிட - முழங்க. "பனிக்கதிர்க் குலவன் பயந்தருள் பாவையைத், திருப்பெரு வதுவை பொருந்திய வந்நாட், சொன்றிப் பெருமலை தின்று நனி தொலைத்த, காருடற் சிறநகைக் குறுந்தாட் பாரிட, மாற்றா தலைந்த நீர் நசை யடக்க, மறிதிரைப் பெருநதி வரவழைத் தருளிய, கூடலம் பதியுறை குணப்பெருங் கடவுள்." (கல். க௪.)

### அ - ம் திருவிளையாடல்.

க. பரவசத்தைவிட்டுக் கேண்மின்.

உ. கதம்பக்கான் - கடம்பவனம். நாளில் - காலக்கிரமத்தில்; (க௨) கக. மனத்தினைத் தன்னுடைநினைவின் ஆக்கினள்.

௩. சதமுறை - பலமுறை; (௩0) ௩க. அதப்படும் - வருப்படுகின்ற. தாய் அமங்கலி. உததி - கடல். திருவுளத்தடைத்து - அங்கீகரித்து; திருவுளம்பற்றி.

௪. பயம் - பிரயோசனம்.

௫. மோனமாக இருந்தது. முகச்சோகம் - முகவாட்டம்.

௬. ஏதம் - துன்பம்.
௭. சண்டம் - வேகம்.
௯. அங்கிமூலை - அக்கினிமூலை. "மாமியாடப் புணரியழைத்த,காமர் கூடற் கிறைவன்" (கல். உ௯.)
௧௦. மனோகரம் - மகிழ்ச்சி.

௯ - ம் திருவிளையாடல்.

௧. வழுத்தி - சொல்லி; "வழுத்தீர் மதிச் செங்கண்மால்" (அழகர்கல. ௭௭). மாதா - தாய். புணரி - கடல்.
௨. பெருமையால் வந்த.
௩. காதலன் - கணவன். நரலை - கடல். மடந்தையர் ஆடாரென்பர்.
௪. யாய் - தாய். மன்றல் - கலியாணம்.
௫. அவை - சபை. நம்ம - நம்முடைய; தனித்தன்மைப்பன்மை. கல்லோலம் - அலை. மாமடிகளென்பது மாமனாரென்னும் பொருளைத் தருவதொருசொல்; (உ௨) க௨ : "நின்பால் வந்தனன் மாமடி."; "ஊத்தைத் தலைநீத் துய்ந்தொழிந்த வொருமா மடிக ளொருமுருட்டு, மோத்தைத் தலை பெற் றமைபாடமூரிக் கபாடந் திறமினோ" (தக்க. ௪௬); "மாமடிகளிடு சாபமும்." (மீனாட்சி. அம்புலி. ௬.)
௭. உந்தை - உன்தந்தை.
௮. தடாதகை, எழுவாய்.
௯. தெய்வத்தனு - திவ்யசரீரம்.

௧௦ - ம் திருவிளையாடல்.

௧.—(௧௧) ௫.
௩. உக்கிரப்பெருவழுதியார் சடையோடுபிறந்தனரென்பதை,"பஃறலைப்பாந்தட் சுமைதிருத் தோளிற், றரித்துல களிக்குந் திருத்தகு நாளி, னெடுநாட் டிருவயிற் றருளுட னிருந்த, நெடுஞ்சடை யுக்கிரற் பயந்தரு ணிமலன்"(கல். ௭௮) என்பதனாலும், "வேலோன் விமலைதடா தகைவயினுக் கிரனு ரென்றோர், நன்மகவாய்ச் சடையொடுமூற் பவிக்க" (கடம்ப. இலீலா. ௧௦) என்பதனாலும் உணர்க.
௪. ஒலித்து - ஒலிப்பித்து. நெய்யாடல் - நெய்விழவு.
௫. உருவம் உக்கிரமானதுகொண்டு.
௭. முடிசூட்டியவர், சுந்தரமாறர்.
௮. சடிலம் - சடை. விதுகுடுமிப் பெருவழுதி - சுந்தரமாறர்.

௧௧ - ம் திருவிளையாடல்.

௧. காலத்திற் கடப்பீர்.
௨. வளை, செண்டு என்பன ஆயுத விசேடங்கள். அறி வடகிரி - எல்லாராலும் அறியப்படும் மேரு.
௩. 'வடிவணங்கு' என்பது பெயர்.
௪. அபிடேகச்சொக்கன் - கிரீடத்தையணிந்த சொக்கநாயகர்; அபிடேகம்-கிரீடம்; வைஷ்ணவஸம்பிரதாயத்திலும் இப்பெயர் இப்பொருளில் வழங்குகின்றது.
௫. இச்செய்யுள், "அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த, வப்பார் சடையப்பன்" (திருவா. திருவம்மானை, ௧௧.) என்னும் திருவாக்கின் பொருளைத் தழுவியது.

௧௨ - ம் திருவிளையாடல்.

௧. வேலை-கடல், காலம், தொழில்.
௨. கொள்ள - கடல்கொள்ள.
௩. எவரும் இறப்பம். தம்பம் - பற்றுக்கோடு; "தம்பத்தனை நீந்தித்தொருவேள்விதொடங்குந், தக்கன்" (தத்துவ. பிள்ளை. சிற்றில். ௫.)
௪. மேகங்கள் நான்குவகை; "மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழ" (கம்ப. சுந்தர. ஊர்தேடு. ௧௭௪.)
௫. அணுக்கள் - உயிர்கள்.
௬. கொண்மூக்கள் - மேகங்கள். வள்ளுறை - பெரியதுளிகள்.
௭. கூடம் - வீட்டின் ஒருபகுதி, வஞ்சனை.
௮. நீர், முன்னிலைப்பன்மை. ஆதரம் - அன்பு.
௯. கருவி - தொகுதி.
௧௦. புயல் - மேகம், நீர். ஆசை - திசை. சடைப்புரை - சடையின்உள்வெளி.
௧௨. போற்ற - பாதுகாத்தற்கு.
௧௩. கொண்மூ, விகாரம்.

௧௩ - ம் திருவிளையாடல்.

௨. வென்றுநீள்கழல், ஆறும்கழலெனக. மனோகரம் - மகிழ்ச்சி.

௩. சற்பம்=சர்ப்பம்-பாம்பு. பொக்கணம் - ஒருவகைப்பை; "சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்" (திருச்சிற். உ௪உ.) எனவும், "சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும்" (திருவிளை. எல்லாம். ௩.) எனவும் வரும்; பின், "பொக்கணச் சித்தன்" என்பர்; ௧௧.

௪. முத்திரை - அடையாளம்; சித்தவேடத்திற்குரியகுண்டலம். குஞ்சிச்சடை - சிறுசடை.

௬. ஆழிமண்கடவாமல் - கடலானது மண்ணைக்கடவாமல். ஈழம் - பொன்.

எ. ஆதிநாதர் - நவசித்தர்களில் ஒருவர்; சிவபெருமானென்பது மற்றொருபொருள். தோதகம் - குறிப்பு.

௮. கரப்பெருங்குன்று - யானை. ஐய - சிறிய. அம்பலம், சிலேடை.

௯. காந்தன் - தலைவன். குழப்பி - குழம்பச்செய்து.

௧௦. முறைசெய்வோர்-ஏவலாளர்.

௧௧. தக்கரம்=தஸ்கரம் - கள்ளத்தன்மை.

௧௨. அனிலமார்மூலை - வாயுமூலை.

௧௩. வேத்திரம் - பிரம்பு. கஞ்சுகியர் - சட்டையிட்டோர்.

௧௪. புண்டரும்நீற்று முண்டி - அணியத்தக்க திருநீற்றாலாகிய திரிபுண்டரத்தையுடையாய்.

௧௫. அநுபமன்-ஒப்பில்லாதவன். நீத்து - வெறுத்து.

௧௬. மதித்தவன் - மதிக்கப்பெற்றவன். என்பாங்கு - என்னிடம்.

௧எ. என்ன - என்று அகத்தியமுனிவர் சொல்ல.

## ௧௪ - ம் திருவிளையாடல்.

௧. ஆசையற்றுமொழிந்தான். அறிவோமென்று அரசன்கருதி.

௨. ஆக்கினைச்சித்தர் - வலிமையால் எல்லாம் செய்விப்பவர்; இஃது, எல்லாம்வல்லசித்தமூர்த்தியின் திருநாமம். நன்குற - தெளிய.

௪. சடக்கெனவொலிக்குறிப்பு; சடக்கெனத் தின்னென இயைக்க; "சடக்கென, வாங்கயின்று." ௮. கண்கொடு எவினன்.

௫. அழல் விழித்து - தீப்புறப்பட விழித்து. கண் - கணு, விழி. வேழம் - கரும்பு, யானை.

௬. "நதிமதந் தறுதண் புகர்கொலை மறுத்த, கல்லிப மருனைக் கரும்பு கொள வைத்த, வாலவா யமர்ந்த நீலநிறை கண்டன்." (கல். ௩௩.)

எ. தந்து - நூல். நாளம் - தண்டு. ஏகாவலி - ஒற்றைவடமாகிய முத்தமாலை.

௯. உளமழன்று. சித்தர்க்குவென்றி.

௧௧. சோமசுந்தரக்கடவுளின் ஆலயத்தை யாண்டும் பெரியகோயிலென்பர். பணி - திருவிளையாடல், ஆணையுமாம்.

## ௧௫ - ம் திருவிளையாடல்.

௧. இயல்வாணர் - புலவர்கள்.

௨. தவிசு - ஆசனம். கோணம் - சதுரம். பாஅறி ஞானப்பலகை: (பதி) உ. (௧௯) ௮.

௩. ஆய - ஆராய. நீடு ஆசனம் - பெரிய ஆசனம். பரிவு - அன்பு.

௪. மண்டபத்திடை நடு - மண்டபத்தில் நடுவே; இடை, ஏழாம்வேற்றுமையுருபு; இடைநடு - ஒருபொருட்பன்மொழியுமாம். தாங்குதல்கொடாது - தாமதியாது; (௧எ) ௫.

௫. பயன்கள் நான்கு - அறமுதலியன. முத்தமிழ்க்கொத்து - முத்தமிழ்நூல்களின் தொகுதி; ௯, ௧௦; (௧௪)

எ. நற்றவன் - சிவபெருமான். செற்றம் - தணியாக்கோபம். சித்திரம் - வியப்பு.

௬. செந்தமிழை - செந்தமிழ்ச்செய்யுட்களை; எ. உயர்ந்த, முற்று.

எ. தொடர் - நட்பு. மலைந்து - மாறுபட்டு.

௮. இரங்கி வந்தனன்.

௯. இருந்திர் - இருந்தனிர். போக்கலாவிருப்பின் - நீக்குதற்குரியதாக இருந்தால்.

௧௦. அதர்பட - வழிப்பட.

கக. கேவலனல்லன் - ஸாதாரணனல்லன்.

கஉ. பொருள் - அகப்பொருளிலக்கணம்; பொருள்நூல் - அப்பொருளிலக்கணநூல். "அன்பினைந்திணை" என்பது, இறையனாரகப்பொருளின் முதற்சூத்திரத்தின் முதற்குறிப்பு; "உலகியனிறுத்தும் பொருண்மரபொடுங்க, மாறனும் புலவரு மயங்குறு காலை, முந்துறும் பெருமறை முளைத்தருள் வாக்கா, லன்பினைந் திணையென் றறுபது சூத்திரங், கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற், பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத், தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்.", "அருமறை விந்யு மூலகியல் வழக்குங், கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து, வடசொன் மயக்கமும் வருவன புணர்த்தி, யைந்திணை வழூவா தகப்பொருளமுதினைக், குறுமுனி தேறவும் பெறுமுதற் புலவர்க, ளேழெழு பெயருங் கோதறப் பருகவும், புலநெறி வழக்கிற் புணர்குல கவர்க்கு, முற்றவம் பெருக்கு முதற்குரு பதர்க்கு, நின்றறிந் துணரத் தமிழ்ப்பெயர் நிறுத்தி, யெடுத்துப் பரப்பிய விமையவர் நாயகன்" (கல். ரு., சுசு.)

கச. ஒருகவிதைதொடா - ஒருசெய்யுள் தொடுத்து; தொடுத்தவர், சிவபெருமான்.

கரு. நிறைந்திருந்தார் - மகிழ்ந்திருந்தார்.

கஎ. விடுவிப்பான் காரணமா-விடுவித்தற்பொருட்டு.

ககூ. சோமசுந்தரக்கடவுள் புலவர் வடிவங்கொண்டு சங்கப்புலவருக்கு இடையே நெடுநாள் எழுந்தருளியிருந்தபொழுது, அவர்கொண்டருளிய திருநாமம், மதுராப்பேராலவாயரென்பது; (கஅ) அ.

### ககூ-ம் திருவிளையாடல்.

க. விடுதலம் - நிலாமுற்றம்.

உ. மாதேவி-பாண்டியன்மனைவி. மாருதவசத்தால் - காற்றுவழியால்.

ச. கிழி - துகிற்பொதி; ஆகுபெயர். ஆசிரியர் - சங்கப்புலவர். சீயம் - சிங்கம். தூக்கினன் - தொங்கக்கட்டினன்.

ரு. சமாதி - சங்கற்பம்; (உரு) ச; (உஅ) உக; (சஎ) உ.

சு. அதில் - அக்கவிகளில்; சாதியொருமை. ஆவிநன்கு - மனமகிழ்ச்சி; "என்னாவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்." (சீவக. கனக. ருஉ.)

எ. நீங்ககில்லாமல் - நீங்காமல்.

அ. தந்தை - சிவமுனி. மெல்லச் சொல்லுவான்.

கo. 'கொங்குதேர் வாழ்க்கை' என்னுங்கவிதைவருமாறு: "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே" (குறு. உ.); "பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ்கூறிப், பொற்குவை தருமிக் கற்புடனுதவி, யென்னுள்ங் குடிகொண் டிரும்பயனளிக்குங், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்." (கல். க.)

கக. கவிதை ஏடு - செய்யுள் எழுதப்பெற்ற ஏடு. வாய்மையுரியவர் - சங்கப்புலவர். நீவி - கிழி. கொள், ஏவல்.

கஉ. நன்பு - நன்மை. புலவர்கள் வெளிப்படையாகப் புகழவில்லை.

கரு. வேதியன் - தருமி.

கரு. அரவம் - முழக்கம்.

கஎ. இதை - இக்கவியை. நீ கொண்டுவா.

ககூ. கற்றுச்சொல்வோர் - கற்றுச்சொல்லிகள். திருமுடிச்சாத்து-தலைக்கட்டு; (உரு) சு: "தனிமுடிச்சாத்துஞ் சாத்தி". ஆழிகள் - மோதிரங்கள். தேத்து - இடத்து.

உo. பிழம்பு - திரட்சி.

உக. வாளா - சும்மா.

உஉ. கவிதைகளிரண்டும் வருமாறு:—வெண்பா. "அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப், பங்கம் படவிரண்டு கால்பரப்பிச் - சங்கதனைக், கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென்கவியை, யாராயு முள்ளத் தவன்." "சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிராற் கேதுகுலம், பங்கமுறச் சொன்னாற் பழுதாமோ - சங்கை, யரிந்துண்டு வாழ்வா மரனாரைப் போல, விரந்துண்டு வாழ்வ திலை."; 'சங்கரனார்க் கேதுகுலம்' என்றும் பாடம். விளிந்து - நாணமுற்று.

உங. செய்யாவிடின், மேற் சிக்கு நாறுமே.

உச. ஒக்குமே - பொருந்துமா. செற்றி - நெருங்கி. அல் தரும். இயற்கை இலை.

உரு. அதுகண்டு - அதுதெரிந்து. சடிலம் - சடை.

உஎ. ஏயென - விரைவாக.

உஅ. பேச்சைக்கண்டு - சொல்லையறிந்து. இலைவிட்டு வழக்கைக் காணாயென்?

உகூ. சிற்புட்பகேசி - ஞானப்பூங்கோதை; இது, சீகாளத்தியிலுள்ள அம்பிகையின் திருநாமம்; "இன்னபூவாசகேசி" என்பர்; ஙo. கூப்பிடுகின்றவாறு தெரிந்தறிந்திலையோ.

ஙக. மாறு - அச்சமற.

ஙஉ. வாய்த்ததென்று வாழ்ந்தனன்.

ஙங. மிக்க தேவியை. ஊழி - பல நாள்.

ஙச. திருந்து இருக்கு உள் அத்தர் - திருந்திய வேதம் தியானிக்கின்ற தலைவர். திருக்குளத்து - அழகிய நெற்றியில். திரை பொரும் திருக்குளத்து - அலைகள்மோதுகின்ற பொற்றாமரையில். உளத்து பெருந்திருக்கு உள்ளான் - உள்ளத்திற் பெரியமாறுபாட்டையுடைய நக்கீரர்.

**கஎ - ம் திருவிளையாடல்.**

ங. ஓர் அந்தாதி - கயிலைபாதிகாளத்திபாதியந்தாதி.

ச. பழிச்சி - துதித்து.

ரு. மேற்கூறிய அந்தாதியின் முதல்வெண்பாவின் முதல், "சொல்லும் பொருளுமே" என்பதாதலின், 'சொல்லெனுமருந்தமிழ்' என்றார். தாங்குதல் கொடாது - தாமதியாமல். அடுத்து நின்று தடத்தினின்று இனிதெடுத்தானென்க.

சு. வன்னியென்றது நெற்றிவிழித்தீயை. சான்றவர் - சங்கப்புலவர்.

எ. பூண - தொண்டுபூண. 'அங்கு' என்றது சங்கமண்டபத்தை. அறிஞர் சங்கப்புலவர்.

**கஅ - ம் திருவிளையாடல்.**

க. போதம் - போதித்தல்.

ங. தென்றல்வரை - பொதியில். சேர்ந்து அபயமென்று.

சு. பொற்ற - பொலிவுபெற்ற.

கூ. பரிசஞ்செய்து - தீண்டி.

க0. அன்றுழை - அவ்விடம். வாய்மையான் - சிவபெருமான்; எழுவாய்.

கஉ. பிறர்கண் அக்கரம் பொறாதவன் - பிறரிடமுள்ள வித்தையைச் சகியாதவன்; அக்கரம், ஆகுபெயர்.

கங. தமிழ்க்கருநம் - செய்யுட்களும். இருணீக்கினான் - நக்கீரர்.

**ககூ - ம் திருவிளையாடல்.**

க. (உ0) ங: "ஆலவாயமுதே", (உஎ) க: "ஆலவா யமுத வாயான்" என்பர் பின்னும். பொருட்சூத்திரத்தற்கு - இறையனாரகப்பொருட்சூத்திரத்திற்கு. ஒருகாலத்தில்.

ச. இயல்வாணர், விளி. உப்பூர்கிழாரென்பது உருத்திரசன்மனாருடைய தந்தையார் பெயர்.

ரு. யாதொருசெய்யுள் - எந்த உரையை; உரையும் செய்யுளென்றுவழங்கப்பெறும்; "இலக்கண மிலக்கிய முரையெனப் பெயர்பட், டிருக்குமென் றெண்ணுக செய்யுளி னியல்பே." (இல. கொ. ஒழி. சரு.) என்னும் சூத்திரத்தாலும் அதன் உரையாலும் உணர்க. உண்டோ - உண்டாமோ.

க0. செட்டி - வணிகன், முருகக்கடவுள்; (உஉ) கூ: "செட்டியுஞ் செட்டியா யுதித்தான்."

## உ0 - ம் திருவிளையாடல்.

க. "தோழனுங்கபிலன்" என்பர் பின்னும்; ரு. இகழ்வியோன் - இன்பத்தைச்செய்பவன்; (உக) ௬: "இகழிய புல்லு மிட்டேம்.".

உ. பாண்டியன் இடைக்காடரைத் தள்ளியது, ௯க: "உன்னுடை மதத்தாற் றள்ளி யோட்டியதென்னை" என்பதனாலும் துணியப்படும். பொலாமணி=பொல்லாமணி - துளையிடாதமணி; சிவபெருமான்; "புகவே தகேனுனக்கன்பருள் யானென்பொலாமணியே." (திருவா. திருச்சதக. க0); "என்பொலா மணிமனமிரங்கிற் றென்பவே." (பிரபு. முனிவர். ௬.)

ங. இதில், சொல் உமை, பொருள் சிவபெருமானென்றதை, "என்னை யிகழ்ந்தனனேல்சொல் வடிவாய்நின் னிடம்பிரியா விமையப் பாவை, தன்னையுஞ்சொற் பொருளான வுன்னையுமே யிகழ்ந்தனன்" (திருவிளை. இடைக்காடன். க0.) என்பதனாலுமுணர்க.

ரு. மின் - உமாதேவியார். மேவ - சிவபெருமான் எழுந்தருள; "முன்னிடைக்காடன் பின்னெழ நடந்து." (கல். எ௬.)

எ. எண்ணமொன்றிலாமல் - புத்திபூர்வமின்றி.

அ. கவிமனர் - கவியரசர்; சங்கப்புலவர்.

௯. கால் நடை.

க0. கிஞ்சில்=கிஞ்சித் - சிறிது; இது, மலைநாட்டுவழக்கு.

கக. அந்தாதியென்றது, சிவபெருமான்திருவந்தாதியினை; இது, க௧-ம் திருமுறையிலுள்ளது. சொன்னவனாகிய கபிலன். என்னை - யாது.

கஉ. உனக்குப் போதுமோ - உனக்கு இத்தன்மை உண்டாதல் தகுமோ.

கச. நன்புலவன் - இடைக்காடர்.

கரு. பன்னியதமிழ் - இடைக்காடர்பாடியதமிழ்ப்பாடல்கள். ஓடைப்பருப்பதத்து எருத்தம்-யானைப்பிடர்.

## உக - ம் திருவிளையாடல்.

உ. உறைவு - வீடு.

ங. நாவல்பயில் தென்புலம் - நாவலந்தீவு. நாம் அளித்த வேலை அற - அச்சத்தைக்கொடுத்தகடல் வற்றும்படி. சென்று எறி.

ச. பரவை வரக் கண்டு.

௬. சிவந்து-கோபித்து. அடிவடிம்பு அலம்ப-பாதத்தின் ஓரத்தைக்கழுவ.

அ. சத்தி - வலி, வேல்.

௯. நினைக்குங்கண் - நினைக்குமிடத்து. தமிழ்ச்சங்கம், முதற்சங்கம் இடைச்சங்கம் இவற்றின் நிலையையுடையதாகும். கங்கைக்கரை - பொற்றாமரைக்கரை; துங்காநதியின்கரையுமாம். ஸ்ரீஹாலாஸ்யமாஹாத்மியம், கரு-வது லீலை, ச௬-ம் சுலோகமுதலியவற்றைப்பார்க்க.

## உஉ - ம் திருவிளையாடல்.

க. ஆகமங்களைத் திருவாய்மலர்ந்தனன்.

உ. நனிவெகுண்டு.

ரு. தந்திமத்தகப்பிள்ளை-விநாயகர்; மத்தகம்-தலை. துதிக்கை-துதித்தல், தும்பிக்கை. பௌவம் - கடல்.

௬. பல கை - பன்னிருகைகள்.

எ. மூங்கையம்புதல்வன்-ஊமைப்பிள்ளை.

அ. கணநாதனொருவன் உட்புக. அத்தி - கடல். ஆகமமெடுத்து உலவ்டு. புத்தி - ஞானம்.

௯. அதியனாயன் - வலைச்சாதிக்கு அரசன்; 'அதிபத்தர்' என்பதனாலுமுணர்க; க0, கஅ. இவ்வரசனுடைய ஊரின்பெயர் விக்கிரமமென்று திருவுத்தரகோசமங்கைப் புராணம் தெரிவிக்கின்றது. காவல்நந்தி. செட்டி - முருகக்கடவுள்.

கக. பிறிவு - பிரிவு. வலைவாணர் - வலைஞர். பரதன் - வலைஞன்.

கஉ. மாமடி - மாமனார்; விளி; (௯) ரு - ம் செய்யுட்குறிப்பைப் பார்க்க. மறைநூல் முறைதரு கயிறு - வேதமாகிய நூலால் முறைமையே உண்டாக்கப்பெற்ற கயிறு; வேதக்கயிறு.

௧௩. வாங்கு கயிறு - குறுக்கேமறித்து வாங்கும் கயிறு. கண்கள் - வலையின் இடைவெளி. மணி - உருண்டைகள். "ஒரு சிறுகுடிப் பரதவனாகிப், பொன்றலைப் புணர்வலை கொடுங்கர மாக்கி, நெடுங்கடல் கலக்குமொருமீன் படுத்த, நிறையரு ளுயகன்" (கல். ௧௧.)

௧௫. மிடித்தனம் - வறுமையுற்றேம்; "இடைமிடித் தார்தமைத்தேடி" (திருவெங்கைக்கோவை, ௩௧.)

௧௬. சிலைத்து - முழங்கி.

௧௮. "அதியரைய மங்கை யமர்ந்தான் றன்னை" (திருநா. தே. திருவதிகை.) என்றதிருவாக்கு, சிவபெருமான் அதியரையன் திருமகளை விரும்பி மணஞ்செய்தருளிய இவ்வருமைத்திருவிளையாடலைப் புலப்படுத்தி விளங்குதல் காண்க.

௧௯. இறைபணியே - சிவபெருமான் திருவிளையாடலே.

௨0. ஆதிமுனி, விளி.

௨௨. புரியா - புரிந்து. "என்னை யுத்தமபத்தர்" என்பர் பின்னும்;

௨௩. மன்றற் பேதை - மங்களேசுவரி. திருவுத்தரகோசமங்கைப்புராணம், அத்தலத்தில் தவஞ்செய்த முனிவர்கள் ஆயிரவரென்றும் அவர்களுக்குக் காட்சிகொடுத்தருளியவருடைய திருநாமம் காட்சிகொடுத்தநாயகரென்றும் கூறுகின்றது; பார்ப்பதிதவம்புரிந்த அத்தியாயம் பார்க்க.

௨௩. பத்தர்தங்கண்-பத்தரிடத்து, உத்தரகோசமங்கை.... ஆகமகோசங்கள் - விடையாகிய ஆகமபுத்தகங்கள்.

௨௩-ம் திருவிளையாடல்.

௪. சமாதி - சங்கற்பம்.

௫. துப்பு - பவழம்; தூய்மையுமாம்.

௬. கழையதண்டு - மூங்கிற்றண்டு. கலிங்கம் - ஆடை. முடிச்சாத்து - தலைப்பாகை. காதணிகளும் கண்டிகைகளும் தீர்ழ.

௯. வளைத்தனன் - அகப்படுத்திக்கொண்டார்.

௧0. மாலை - மயக்கத்தை.

௧௪. வளைப்போம் - தடுப்போம்; "வள்ளனீங்கப்பெறுய்வளைத்தேனென" (சீவக. குண. ௩௬.).

௧௫. தனம் - கொங்கை, பொன். "இதழியுந் தும்பையு மதியமுங் கரந்து, வளைவிலை மாக்கள் வடிவெடுத்தருளி, முத்தமிழ் நான்மறை முளைத்தருள் வாக்கால், வீதி கூறி விறித்த முன் வரத்தாற், கருமுகில் விளர்ப்பவறனீர் குளிப்பக், கண்புதை யாப்புத் திணியிருள் விடிய, வடவெழுமும் பிணித்தபாவமும் புலரக், கண்டநீள் கதுப்பினர் கைகுவி பிடித்துக், குருகணி செறித்த தனிமுத லுயகன்." (கல். ௪௬.)

௧௬. செட்டியார், விளி.

௧௭. பாலலோசனம்-நெற்றிக்கண்.

௧௯. அளகைக்கோன் - குபேரன்; கோனென்னும்பெயர் வணிகருள்வழங்கும். மழவுற - இளமையுற. மழவுறுதற்குக் குமரியாடவந்தனன்; குமரி, சிலேடை. கிளை - நல்லகுலம், மூங்கில். இச்செய்யுள், "வந்தவரவென்னை" (சீவக. ௪௮. ௨௬) என்னும் செய்யுளின் கருத்தைத் தழுவிவந்தது.

௨0. பரிசனம் - ஸ்பரிசம். தாங்குதல் கொடாது - பொறாமல்.

௨௧. 'அஞ்சி' என்றார், பழியஞ்சியாதலின்.

௨௨. 'உடையவனறிந்திடாத சரக்கிலை' என்பது ஒருபழமொழி.

௨௪. செச்சைக்கண்ணி - வெட்சிமாலை.

௨௪-ம் திருவிளையாடல்.

௧. காடுவெட்டியென்பது, இவ்வரசன்பெயர். தன் இலச்சினை - மீனமுத்திரை.

௨. ஆலயம் - இந்திரவிமானம்; அஃது, அ - யானை, ௬௪ - கணநாதர், ௩௨ - சிங்கங்களால் தாங்கப்பெறுவது; "கரியெட்டுஞ் சினமடங்க லறுபத்தெட்டு மெட்டெட்டுக் கணமுந் தாங்க." (திருவிளை, இந்திரன். ௮௩.)

௩. 'தென்னனொடு போராடும் வாரா வாறு நீங்குசெயக் கண்டனை' என்பதை, "வழுதி யன்றியும் வையை யும்பகை யான தென்று வருந்தினன்" (திருவிளை. விடை. கக.) என்பது தழுவிவந்திருத்தல் காண்க.

௪. முரித்து - இடித்து. இயந்திரத்தால் ஏற்றி. எயில் முரிவாய் - மதிலை இடித்த வாயில்.

௫. மேல்விதும்ப - உடல்நடுங்க.

௬. ஆரா அன்பு - தெவிட்டாத அன்பு. தடினி - ஆறு.

௭. ஏற்று இலச்சினை - இடபமுத்திரை.

க௦. போத - மிக.

கக. வாய்மதில்,

சேவுறுகுறி - இடபமுத்திரை.

க௨. முறைமை வாயில் - இந்த வரலாற்றை யுடையவாயில்.

உ௫ - ம் திருவிளையாடல்.

க. இன்னெறி - இனியநெறி; நல்லநடை.

௪. காவலறை - காக்கப்படுதலையுடையபொன்னறை. யாரையுமறைத்து மைந்தனைக்காத்த அமைச்சர்களென்க; "முடிசூடுவான் மறைத்துக்காத்தவமைச்சர்." (கடம்ப. இலீலா. உ௫.)

௫. சூட்டுவான் - சூட்ட.

௬. உலகம் அதிர்வுறும் - உலகம் நடுங்கும்.

௭. புரை - காகபாதம்.

௯. தப்பி மண்விழுந்தவைகள்.

க௦. வலனுடைய என்பு வைரம், இரைச்சி பவழம், கருவிழி நீலம், கவம் புருடராகம், இரத்தம் மாணிக்கம், மயிர் வயிடூரியம், நிணம் கோமேதகம், பல் முத்தம், பித்து மரகதமென்க.

கக. மாணிக்கம் எழுவகை இலக்கணமுடைத்து; இவற்றை, "மாணிக் கத்தியல் வகுக்குங் காலைச், சமனொளி சூழ்ந்த வொருநான் கிடமு, நால்வகை வருணமு நவின்றவிப் பெயரும், பன்னிரு குணமும் பதினாறுகுற்றமு, மிருபத் தெண்வகை யிலங்கிய நிறமு, மருவிய விலையும் பத்தி பாய்தலு, மிவையென மொழிப வியல்புணர்ந் தோரே." (சில. ஊர்காண். க௮௬-க௮௭. உரை) என்னுமேற்கோளாலுந்தெளிக.

க௨. சமனொளி - இலங்கைத்தீவிலுள்ள ஒருமலை; இதனை, "இலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ், சிலம்பினை" (மணி. உ௮ - ம் காதை, க௦௭-க௦௮.) என்பதனாலும், அம்மலையென்பதை, "குடுமிச் செக்கர்ச் சமனொளிசூழ்ந்த, நிரைநதி நான்கி னிகழ்ந்தனகுறியும்" (கல். ௪௭.) என்பதனாலுமுணர்க.

க௩. இதிற்கூறிய மாணிக்கத்தின் பன்னிருகுணங்களை, "தேய்க்கி னெருப்பிற் சேர்க்கி னங்கையிற், றூக்கிற் றகட்டிற் சுடர்வாய் வெயிலிற், குச்சையின் மத்தகக் குறியினொ ரத்தி, னெய்த்துப் பார்வையி னோர்ந்து சிவந்தாங், கொத்த நற்குண முடைய பன் னிரண்டும்." (கல். ௪௭.) என்பதனாலுந்தெளிக.

க௪. மாணிக்கத்தின்குற்றம் பதினாறென்பதை, " கருகிநொய் தாதல் கீற்று வெருளி, திருகன் முரணே செம்மணி றுகன், மத்தகக் குழிவு தராசமிலைச்சுமி, வெச்சம் பொரிவு புகைதல் புடாயஞ், சந்தைநெய்ப் பிலியெனத் தருபதி னாறும்" (கல். ௪௭.) என்பதனாலுந்தெரிக.

க௫. அங்கியும் அகில்விழுந்தழலும். சாதுரங்கமுதலியவை மாணிக்கத்தின்வகை; இங்கே மாணிக்கத்திற்குப் பொதுவாகக்கூறிய இருபத்தெட்டு நிறங்களை, நால்வகைப்படுத்தி, சாதுரங்கத்திற்குப் பத்துநிறங்களும் குருவிந்தத்திற்கு எட்டும் சௌகந்திக்கு ஆறும் கோவாங்கத்திற்கு நான்குமாகக் கூறுவதுமுண்டு; "தாமரைகழுநீர்" (சில. ௩௪௬ - ம் பக்கம்.) என்னும் மேற்கோள் முதலியவற்றையும் "கதிர்நிரைபரப்பும்" (கல். ௪௭.)

என்பதையும், "சாதுரங்கநிறம்" (திரு விளை. மாணிக்கம். ௩௧.) என்னும் செய்யுள் முதலியவற்றையும்பார்க்க. மேற்கூறியவற்றில் ஒத்தும் ஒவ்வாதும் இருப்பனவுள.

௧௬. தேசிடையளவே விலைகோள், ஒளிபரத்தலே பத்திபாய்தல். முத்துக்கள் தலசம் சலசமென இருவகைப்படும்; அது பதின்மூன்றிடத்துப் பிறக்குமென்பர், பரஞ்சோதிமுனிவர்; (திருவிளை. மாணிக்கம். ரு௩ - ரு௪). இங்கே, 'காகவாகனர்நிண்டோள்' என்றவிடத்து, அதில், 'ஐவாய்மான்கை' என்பது கூறப்பட்டுள்ளது.

௧௭. "உடுத்திரளனைய காட்சியுருட்சிமா சின்மை கையுற, வெடுத்திடற் றிண்மை பார்வைக் கின்புறல் படிகமென்ன, வடுத்திடு குணமாறு" (திருவிளை. மாணிக்கம். ருஅ.) என முத்தின்குணம் ஆறென்பர். வயிரம் பிறக்குமிடம் எட்டு.

௧அ. வயிரத்தின் குற்றம், ௧உ; குணம், ரு; "சரைமலங் கீற்றுச் சப்படி பிளத்த, றுளைகரி விந்து காகபாத, மிருத்துக் கோடிக ளிலாதன முரித, ருரை மழுங்க றன்றே, டீராறும் வயிரத் திழிபென மொழிப", "பலகை யெட்டுங் கோண மாறு, மிலகிய தாரையுஞ் சுத்தியுந் தராசமு, மைந்துங் குணமென் றறைந்தனர் புலவ, ரிந்திர சாபத் திகலொளி பெறினே" (சில. ஊர்காண். ௧அ0-௧அ௩. விசேடவுரை.) என்னும்மேற்கோள்களாலுமுணர்க.

௧௯. ஆகுலக்கண் - பசுவின்கண். பூவைப்பூ - காயாம்பூ. நீலத்தின் ஒளிவகையை, "கோகுலக் கழுத்துக் குவளை கரும்ப, ராகுலக் கனகனவிரிச் சாறு,............காயா நெய்தல் கனத்தல் பத்தி, பாய்த லெனக்குணம் பத்தென் றுமே" (சில. ஊர்காண். ௧௯0. விசேடவுரை.) என்னுமேற்கோளாலும் உணர்க.

உ0. வீரை - ஒருவகைமரம். பவழத்தின் குற்றம் இன்னவென்பதை, "கருப்பத் துளையவுங் கல்லிடை முடங்கலும், திருக்கு நீங்கிய செங்கொடி வல்லியும்" (சில. ஊர்காண். ௧௯௭ - ௧௯அ.) என்பதனாலும், பச்சையின் குணங்களை, "நெய்த்தன் மயிற்கழுத் தொத்தல்பைம் பயிரிற், பசுத்தல் பொன்மை தன்னுடன் பசத்தல், வத்திபாய்தல் பொன்வண் டின்வயி, றொத்துத் தெளிதலொ டெட்டுங் குணமே" (சில. ஊர்காண். ௧அ௪, ௧அ௫. விசேடவுரை) என்பதனாலுமுணர்க.

உ௧. பச்சையின்குற்றம் எட்டும், "கருகுதல் வெள்ளை கன்மணல் கீற்றுப், பொரிவு தராச மிறுகுதன் மரகதத், தெண்ணிய குற்ற மிவையென மொழிப" (சில. ஊர்காண். ௧அ௪ ௧அ௫. விசேடவுரை) என்பதனால் ஆராய்தற்குரியன.

உஉ. தோராவல்லி, சோரமல்லியெனவும் கனகதோராவல்லி, கனகபுஷ்பராகமெனவும் வழங்கும்.

உ௩. நவம் - புதுமை, ஒன்பது. மறைபறை - வேதம்சொல்லுகின்ற.

## ௨௯ - ம் திருவிளையாடல்.

௧. பவநிசி - பாவமாகிய இருள்.

உ. எண்ணி, நெட்டோலையைக் கட்டி விட்டனன்.

௩. பதிகள் - ஊர்கள். என்று நெட்டோலையைக் கட்டிவிட்டனனென முன்னேகூட்டுக.

௪. எண்கிரி - எட்டுமலை; அவை பலவாறு வழங்கும்; அவற்றின்பெயர்களை, சைனர்களுள் வழங்குவதாகிய, "பரங்குன் றொருவகம் பப்பாரம் பள்ளி, யருங்குன்றம் பேராந்தை யானை - யிருங்குன்ற, மென்றெட்டு வெற்பு மெடுத்தியம்ப வல்லார்க்குச், சென்றெட்டு மோபிறவித் தீங்கு" என்னும்பழைய வெண்பாவாலும், "அஞ்சனங் கௌஞ்சங் கோவத் தனந்திரி கூடங் காஞ்சி, குஞ்சர சைய மேமகூடமே விந்த மென்னு, மஞ்சிவர் வரைக ளெட்டும் வைகுறு மமணர்" (திருவிளை. யானை. எ.) என்பதனாலுமுணர்க; மதுரையைச் சூழ்ந்த எட்டு

மலைகளென்பாருமுளர். வாழ்ந்து - மகிழ்ந்து. சட்டென - விரைவாக.

ரு. மன்று - பொதுவான இடம்; அசோகமரம் அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களென்றுமிவர்கள் தங்கிய ஐந்திடங்கள்கூடியமன்றின்கண் நிற்பதாகச்சொல்லப்படுமாதலின், 'மன்றுநீ டசோகநீழல்' என்றார்; "சந்தி யைந்துந் தம்முடன் கூடி, வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப், பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்" (சில. நாடுகாண். கக - உக.) என்பதனாலுணர்க.

சு. மொஞ்சகம்-மயிலிறகின் தொகுதி; மந்திரித்தற்குச் சைனர் கையிற்கொள்வது; "தழைபுலாங்கையர்" (திருவிளை. விருத்த. க.).

அ. நீட்டு - நாமம். அதிர்வு - முழக்கம். 'முடிமணியெனக்களித்த' என்றதனால், இவர்காலத்து இரண்டு திருவிளையாடல்கள் நடந்தன வென்பது அறியப்படுகின்றது.

க0. அட்டாலை - மதின்மேல்மண்டபம். அது நாயிலென்றுங்கூறப்படும். கண்டான் - கேட்டறிந்தான்.

கக. முன்னர் உழைமுதுதவழ் எயில் - கிழக்குமதில்; க0: "கீழ்பாலிருசி" என்றார்; முன்னர் - முதலிலென்றுமாம்; உழை - மான்.

கஉ. தொப்பாரம் - வீரர்கள் தலையிலணியும் முடிவிசேடம்; இஃது இக்காலத்தில் ஆலயங்களிலே காணப்படும்.

கங. ஏழ - மிக.

கச. அருவிப்பொங்கல் - யானை. இலக்கு - லக்ஷ்யம்.

கரு. திருமாலும் பிரமனும் இந்திரனும் போற்ற. யானை ஆலயம்-யானைகளாற் சுமக்கப்படும் இந்திரவிமானம்.

கஎ. செல் - மேகம். அரிமுகமால் வாளி - நரசிங்காஸ்திரம். முனம்-நெற்றி. இலத்திவாய் - அபானம். உதப்பி - வயிற்றிற்கீரணியாமலிருக்குமுணவு.

கஅ. அத்தி இலத்தி சொரிந்தது - யானையானது இலத்தியைச் சொரிந்தது.

உ0. மானிடர் அடைய - மனிதர் எல்லாரும்.

உக. தலை பறி - தலைமயிரைப் பறித்துக்கொள்கின்ற.

உங. கல் - மலை. [ரேசர்.

உச. வடிவுடைக்கடவுள் - சுந்த

உரு. கச்சம் - அளவு.

உஎ. பிறங்க நின்றான்.

உகூ. பருப்பத இபத்தை - மலைபோன்ற யானையை. அவதானம் - தொழுங்கு வரலாறு; திருவிளையாடல். காவலன் இருந்திருன்.

## உஎ-ம் திருவிளையாடல்.

க. சாத்துவர்கள் - சென்றுசென்று வியாபாரஞ்செய்யும் வாணிகர்திரள்; இது, ஸார்த்தமென்னும் வடமொழியடியாகப் பிறந்ததென்பர். புரவிநூல் - அசுவசாஸ்திரம். குதிரையிட்ட - குதிரைகளையளித்த; "இனப்பரியிட்டதன்றி" என்பர் பின்னும்; (ங0) நிரு. திருவாதவூரர் புராணத்தில், 'குதிரையிட்ட சருக்கம்' என்னும் பெயருண்டு இங்கே அறியற்பாலது.

ங. மருதம் - இருப்பைமரம்; 'நெட்டிலையிருப்பை' என்னும் அகவல், "நெட்டிலை யிருப்பை வட்டவொண்பூ, வாடா தாயிற் பீடைப்பிடியின், கோட்டுக் குழுமே வாடிலா பைந்தலைப், பரதர் மனைதொறுமுணங்குந், செக்கலை யிறவின் சேரக்குழுமே." என்பது. இது தமிழ் நாவலர் சரிதையிற் கண்டது. இருப்பையும் மருதும் அத்தலத்திற்குரிய விருக்ஷங்களென்று தெரிகின்றன; "கமழ்மருதக் மகிழ்வாத புரத்து." (கடம்ப. இலீலா. உஎ.). அத்தலத்தில் ஸ்ரீமாணிக்கவாசகர்க்குச் சிவபெருமான் திருச்சிலம்பொலியைக் காட்டியருளினார்; "வாத வூரினில் வந்தினி தருளிப், பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்" (திருவா. கீர்த்தி. ருஉ - ருங.) என்பதனாலும், இந்நூல்

௨௮ - ம் திருவிளையாடல், ௧௪ - ம் செய்யுளாலுமுணர்க. வேதநாதரென்பது, அத்தலத்துச் சிவபெருமானுடைய திருநாமமாதலின், 'வேதநாயகனார்' என்றார்; "வேதியர்" என்பர்மேலும்; ௪. திருமால்வந்து பூசித்தபொழுது "வேதாஹம்" என்றசுருதி, சிவலிங்கப்பெருமானிடமிருந்து தோன்றின்மையின், இத்திருநாமம் அமைந்ததென்று அத்தலத்து வடமொழிப்புராணம் தெரிவிக்கின்றது.

௪. ஆதியாகிய ஆதித்தன். சோமன் - சந்திரன். வாதராசன் - வாயுதேவன்.

௫. வளை - சங்கு.

௬. மானமங்கலமென்பது, திருவாதவூரருடைய முன்னையோரிருந்த ஊரின்பெயரென்று தெரிகின்றது; இந்நூல், ௨௮ - ம் திருவிளையாடலில் ௮ - ம் செய்யுளிலுள்ள, "இருங்கிலிருநின் மானபுர மென்னுங் கொடுமை பொறுக்ககிலேன்" என்பது ஆராயத்தக்கது. ஒரு கணநாதர், சிவபெருமான்கட்டளைப்படியே வந்து திருவாதவூரராக அவதரித்தன ரென்பதை, "கணநாதர் தமிலொருவன் விடையிற் போர்த்து கமழ்மதுக மகிழ்வாதபுரத்து வாழுந், தணராமாத் தியர்குலத்துட் டோன்றி" (கடம்ப. இலீலா. ௨௭.) என்பதனாலுமுணர்க. இந்நூலில், (௨௨) ௮: "இத்தகைமையிற்றிகழு மெல்லையினி லுட்புக விலங்கு கண நாத னொருவன்" என்றது இங்கே அறியற்பாலது. இச்சரிதவிரிவை, திருவுத்தரகோசமங்கைப்புராணம், பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்தாலுமுணர்க.

௭. முன்னைநூல்-வேதமுதலியன. தன்னுடை நன்குமந்தால் தலைமைசேர் நாமம் - தென்னவன் பிரமராயனென்பது; ஆல், ஓடு; "தென்னவன் பிரமராயனெனக்கொள்க" என்பர், பின்னும்; ௯௰. பிரமராயனென்பது, பிரமாதிராயனெனவும் சிலாசாதனங்களிற் காணப்படுகின்றது.

௮. ஏற்ற தாழ்வு கேட்டிருத்தல் - புகுந்துள்ள குறைகளை விசாரித்துப் பரிகரித்திருத்தல்.

௯. செய்தி - நாற்படைச்செய்தி.

௧௨. கோடகம் - குதிரை.

௧௫. துற்ற - நெருங்கின. கொளப்படும் - கொள்ளல்வேண்டும்; தேற்றவினை.

௧௬. மறு மண்டலம் - வேற்றரசர் தேயங்கள். பந்தி - குதிரைச்சாலை. கட்டத்தகும், தேற்றவினை.

௧௮. அகம் - பாவம். வீந்தனவென்று பகர்ந்தனர். அறை - பொன்னறை. புரவிநூல் - அசுவசாஸ்திரங்கள்; சூரியனாலும், சாலிகோத்திரராலும் அந்நூல்கள் செய்யப்பட்டுள்ளனவென்பர்.

௧௯. மாற்றம் நன்று.

௨௰. புஞ்சம் - தொகுதி. கண்காணியின் - மேற்பார்வையுள்ளோனால்; இப்பெயர், இப்பொருளில் தென்னாட்டில் வழங்குகின்றது.

௨௧. பரிக்கும் செம்மையோர் சுமத்தற்குரிய நல்லொழுக்கமுடையோர்; "பொன்பரித்தவரை" என்பர்பின்னும்; ௪௧.

௨௩. பெண்ணை அன துதிக்கை பிள்ளை - பனைபோன்ற துதிக்கையையுடைய பிள்ளை; விநாயகக்கடவுள்.

௨௪. ஆம் குமரன் - பெருமையையுடையவராகிய முருகக்கடவுள். ஓங்கும் அரன். கனி - மாங்கனி.

௨௬. என்று ஆர் - சூரியன் பொருந்துகின்ற; சூரியனை ஒத்தவென்பதுமாம். இச்செய்யுளிலுள்ள நயங்கள் மிகப்பாராட்டற்பாலன.

௨௭. வாய்த்த பேரண்டத்தான் அண்டங்களைப்பெற்றருளியவர்.

௩௰. மற்று மன்னர் - வேறு அரசர்கள். பல்லியம் - பலவாத்தியம்.

௩௧. காலை - சிவபெருமான் திருவடியை. கானை - திருக்கானப்பேர்; காளையார்கோயில். ஐராவதம், தனக்கிருந்த சாபந்தீரும்பொருட்டுச் சிவ

பெருமானை வழிபட்டதென்பது அத்தலபுராணவரலாறு; "மானமா மடப்பிடி வன்கையா லலகிடக், கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்" (திருஞா. தே.) என்பதனானுமுணர்க. ஐராவதத்தால் உண்டாக்கப்பெற்ற, மிகப் பெரிதான தடாகமொன்று, யானைமடு வென்னும் பெயருடன் இன்றும் அத்தலத்தே உள்ளது.

௩௨. பகல் - சூரியன். அந்தணன் - பிரமன். திருமான்மைந்தன் - மன்மதன். கோடுடைமாமுனி - கலைக்கோட்டுமுனிவர். பூமகள்-பூமிதேவி. பூழியன் - பாண்டியன். காரணவன் - சுந்தரேசுவரர். சோமன் - சோமேசுவரர். காளை - காளையீசர்; அத்தலத்திற் சுந்தரேசுவரர், சோமேசுவரர், காளையீசரென்னு மூன்று சிவலிங்கப் பெருமான்களுடைய சந்நிதிகள் உள்ளன. விக்கிரமசோழன்மாள் சுகந்தகேசியை மணம்புரிந்த வரகுணபாண்டியர், அவளுடைய அழகின்மிகுதியைக்கண்டு அத்தலத்திற் சிவபெருமானுக்கு அர்ப்பணஞ்செய்தனரென்பதும் அவளுடைய கூந்தலின் நறுமணம் எங்கும் பரவியதுபற்றி அத்தலம் சுகந்தவனம் அல்லது கந்தவனமென்று பெயர்பெற்றதென்பதும் அத்தலபுராணவரலாறுகள்.

௩௩. 'மொய்யார் பொய்கை' என்பது, திருப்பெருந்துறையிலுள்ள ஒரு தீர்த்தம்; "மொய்யார் தடம்பொய்கை புக்கு" (திருவா. திருவெம். கக.) என்பதனாலுமுணர்க. திருப்பெருந்துறையென்பது, பிருகத்தீர்த்தமென்று வடமொழியில்வழங்கும்; இத்தலம் இக்காரணப்பெயர்பெற்றதை, திருப்பெருந்துறைப்புராணத்துள்ள பெருந்துறைப்படலத்தாலுணர்க.

௩௪. வளை - சங்கு. நாகம் - புன்னை; நாகம்நிழலிற் காட்ட.

௩௫. மூன்றுநூறுமறையவர் - முந்நூற்றுவர்; இவர்கள் இத்தலத்திற் சிவபெருமானைப் பூசித்தல் முதலிய வழிபாட்டிற் குரியோர்; தில்லைமூவாயிரவரைப்போல. இறையினின் அமரராக்குமென்க.

௩௬. சந்தை - வேதம்; சிவபெருமான் உபாத்தியாயர் வேடம்பூண்டு அத்தலத்தில் ஓரிடத்திற் சிலநாளிருந்து மேற்கூறிய முந்நூற்றுவர்களுடைய பிள்ளைகளுக்கு வேதத்தை ஓதுவித்தமையின், 'சந்தைபடுந்துறை' என்றார்; "வேதநாயகற்கு" என்பர் பின்னும்; ௬௪. ஓதுவித்த இடம், பள்ளிக்கூடமென்று இன்றும் வழங்குகின்றது. தொந்திகொள் தந்தி - விநாயகர். குருந்தமரம் - இத்தலவிருக்ஷம்.

௩௮. கலைச்சங்கம் - வித்தையின் தொகுதி; அடையின் தொகுதியென் பது மற்றொருபொருள். மறைவருவங்கம் - திருவாதவூரர்.

௩௯. சிலும்ப - சிலிர்ப்ப.

௪௧. பாக்கியம் - புண்ணியம். அறுதியிட்டு - நிச்சயித்து.

௪௨. நீங்கள் போய் உரையும்.

௪௩. ஒப்பார்போல - இராசகாரியங்களை ஒழுங்குபடச்செய்யும் இயல்புடையவரைப்போல; "பெரிய செல்வரொப்பார்போல்", "மீனமகிழ்ந்து விளைந்தொப்பார் போலச் சென்று" என்பர் பின்னும்; ௬௪, ௭௧; "ஒவ்வாதார் தாமெனவ ரொப்பார்மற் றெனவூர்" (சீவக. கேம. ௧௩௨.) என்பதையும் அதனுரையையும் பார்க்க.

௪௫. காசு இல் நான்மறை. எட்டால் - அஷ்டாங்கவந்தனத்தால். அஞ்சினால் - ஐந்து அங்கவந்தனத்தால்.

௪௬. நோக்குபதேசம் - சக்ஷுர் தீக்ஷை.

௪௮. முதலடியிரண்டும் நிரனிறை.

௪௯. சிவபாக்கியம் - சிவபுண்ணியம்; என - என்றுசொல்ல. பரங்கண்டவர் - திருவாதவூரர்.

௫௧. சபவடம் - ஜபமாலை. மரித்த - நினைத்த; இறந்தவென்றுமாம்; "மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" (தாயு. பரா. ௧௩௩).

௫௨. சாத்தல் - வேதம்; திவ்யப்பிரபந்தமோதுதலைச் சாத்துமுறையென்

னும் வழக்கமும் இதனைவலியுறுத்து கின்றது.

௫௪. ஞானப்புதல்வர்சள் - ஞான புத்திரர்கள்; சிஷ்யர்கள்.

௫௫. குருந்தமரத்தின்கீழே சிவ பெருமான், தொளாயிரத்துத்தொண் ணூற்றொன்பது மாணாக்கர்களுடன் ஞானாசாரியராக எழுந்தருளியிருந்த னரென்று உணர்க; **திருவுத்தரகோ சமங்கைப்புராணத்தில்,** பார்ப்பதி தவம்புரிந்த அத்தியாயத்திற் கூறப்பெ ற்றுள்ள. திருவாதவூரருடைய பண் டைவரலாறு இங்கே அறியற்பாலது. புதல்வர் - மாணாக்கர்.

௫அ. நிகழ்வ-அம்மனைமுதலிய வி ளையாட்டுக்கள். 'மெய்' என்பது, **திரு வாசகத்தில்,** திருச்சதகத்தின்முதற் குறிப்பு.

௫௯. ஊண் உறக்கமின்றி உடல் வருந்தி. செட்டன அல்ல.

௬௧. தென்னவர் - தென்னாட்டி னர்.

௬௨. பாசுரம் - இலைப்பாசுரம்.

௬௩. மன்னவற்பிழைத்தல்-இரா சத்துரோகம்.

௬௫. தேமால் - தெய்வமாகிய திரு மால். தாமா - தாவுகின்ற குதிரை.

௬௬. வேந்தன் - பாண்டியன். உட லம் வருந்த. இதிலுள்ளவரலாறு, இங் கேகூறப்பட்டவண்ணம் **திருப்பெரு ந்துறைப்பழையபுராணத்**துள்ளது; இக்கதையிற் சிலபகுதி. **திருப்பெருந் துறைப் புதியபுராண**ம். பெருந்து றைப்படலத்தால் நன்குவிளங்கும்.

௬௭. தீர்த்தி - துயிலுணர்த்தி.

௬அ. உளம் அஞ்சேல். வேண்டிய இட்டு - வேண்டுவனவற்றைச் சேர் த்து. பைந்நூலை - பசிய நூலை. வினைக் கண் நில்லார். கட்டு நூல் - கட்டினை யுடைய நூல்.

௬௯. கோராது உணர்ந்துகொள் வாய். வையாளி - குதிரை நடத்தும் இடம்.

௭0. பாரத்தை ஆயத்து விடு த்து. மெத்தன - மெல்ல.

௭௨. உயர்பு எவ்வளவுபோதும் - உயர்ந்த குதிரைகள் எவ்வளவு வரும். கூசல் - நாணமுறல்.

௭௪. வகை - குறுந்தெருக்கள்.

௭௬. அணியல் - ஆபரணம். களா சி - காளாஞ்சி.

அக. தவிர்ந்து அமைச்சனாய்.

அ௨. கிளைஞர்க்கு இனி யாருண் டென்றுசொல்ல. ஆர் வெறுப்பு ஆர் உவப்பு - ஆர் பகை ஆர் நட்பு.

அ௩. தனிசு - கடன்.

அ௪. மங்கலமுறைசெய்வோர் - நற்குணமுடைய வேளாளர்; "நன் னெறிமுறை செய்வோர்" என்பர் மேலும்; அஅ.

அ௫. கோடிக்க - அலங்கரிக்க. கலியாணன் - நல்லநடையையுடைய வன்.

உஅ - ம் திருவிளையாடல்.

௨. வளைத்து - தடுத்து; "வள்ள லிங்கப்பெறும்வளைத்தேனெ." (சீவக. முண. ௬௪.)

அ. இரு, கில், எவல். மானபுரம் - மானமங்கலம்; இது, முடிப்பெயுகா க்கூறியிகழும் இழுக்கிக்குறிப்பு.

௧0. 'குழைத்தாய்' என்றது, கு ழைத்தபத்து. 'சோதியே சுடரே' என்றது அருட்பத்து.

௧௧. மிழலைநாடென்பது திருப்பெ ருந்துறையின் பக்கத்திலுள்ளது; அ திலுள்ள வேளாளர்களின்பெருமை மிழலைச்சதகத்தால் விளங்கும்.

௧௨. நரியாது - நரித்தன்மையில் லாமல்; "நரிப்பாய் நாயேனிருப்பேனே." (**திருவா.** கோயின்மூத்த. ௬).

௧௩. கோமாயு - நரி. துறை - பெருந்துறை; ஆளுடைநாயகனென் பது - ஸ்வாமிதிருநாமம்; திருவாத ரை ஆட்கொண்டருளினமை பற்றி இப்பெயர் இவருக்குண்டாயிற்று; ... பெருந்துறையை ஆளுடையார் கோ யிலென்பதும் இதுபற்றியே.

௧௪. வாதையம்பூரம் - வாதவூர்.

௨0. சூதர் - நின்றேத்துவார்; மா கதர் - இருந்தேத்துவார்.

உக. சம்பு மா சமாதியாலே - சிவ பெருமானது பெரிய சங்கற்பத்தாலே. சம்பு மா - நரியாகிய குதிரை.

உங. நீக்கு இல் நோக்கு அடியார் - ஒழிவில்லாமல் நோக்குதலையுடைய ஏவலாளர். மாறு - மிலாறு.

உச. வார வார - ஒழுக ஒழுக.

உரு. குரம் - குளம்பு. இருமை - பெருமை; இரண்டுதன்மையுமாம்.

உஎ. இனங்கன் - நண்பன்; (கம்ப. கிட். மரா. ௪௦௦).

உஅ. நாயனார் - மாணிக்கவாசகர்.

உகூ. கறுழ் - கடிவாளம். தார் - கிண்கிணிமாலை. பரிச்சாத்து - குதிரைத்திரள்.

௩௦. நெறுக்கென, ஒலிக்குறிப்பு. ககனம் - ஆகாயம்.

௩க. நூறு - புழுதி. தண்டுவன - பொருந்துவன.

௩௩. தலைக்கீடு - தலைச்சாத்து. குப்பாயம் - சட்டை.

௩௪. நெறி ஐந்து - கதியைந்து. பரிவர்த்தனம் - சுற்றுதல்; "இடம்வலம் பரிவர்த்திப்ப" என்பர் பின்னும்; (௫௬). கரவாளம் - கைக்கத்தி.

௩௫. சாத்தவர்கள் - குதிரைவாணிகர்கள்; "குதிரையைக் கொண்டு குடநாடதன்மிசைச், சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (திருவா. கீர்த்தி. உஎ - உஅ).

௩௬. குதிரை சுடு - குதிரைகளைக் கொடுத்தல். சயசயவென்று.

௩எ. சங்கு - வளையல். அறிவும் நாணும். காட்சிபாற் சூல்கொள்ளுதலை, "விரும்புசூல் கொள்வார் வீழ்வார்." என்பதனுலுமுணர்க; (௫௪) உரு.

௩அ. காண்டற்கு ஒட்டுமோ.

௩கூ. அன்பர் - திருவாதவூரர்.

௪௦. தோரை - பீலிவிசிறி.

௪உ. தவ்வும் - தாவும்; "தவ்வு புனல்" என்பர்: (௩௦) ௩உ.

௪௩. தாணு - சிவபெருமான், கட்டை.

௪உ - ௪௩. இந்த இரண்டு செய்யுட்களின் கருத்தை, "அண்டமெலா மாதார மாகத் தாங்கு மானந்தத் தனிச்சோதி யண்டந் தாங்குஞ், சண்டமறைப் பரிதனக்கா தார மாகித் தரிக்கவொரு காலத்து மசைவி லாத, புண்டரிகத் தாளசையப் பாச நீக்கும் புனைகரத்தாற் பரிபூண்ட பாசம் பற்றிக், கொண்டரச னெதிர்போந்து மன்று வெங்கள் குதிரையேற் றஞ்சிறிது காண்டியென்றார்" (திருவிளை. நரிபரி. எரு.) என்பது, தழுவிவந்திருத்தல் காண்க.

௪௫. வாசி - குதிரை, விசேடம்.

௪அ. மின் - தடாதகைப்பிராட்டியார்.

௪கூ. சுபதக்ரமம் - சுபத்தைக்கொடுக்கிறநடை. அனுமனியா - ஒலித்து. மறை அயம் - வேதமாகியகுதிரை.

௫௦. மருத்தை - காற்றை.

௫க. கஞ்சம் - வெண்கலம்.

௫உ. பரதச்சவுதம் - பரதநூல். பருமம் - குதிரைமுதுகிற்றவிசு.

௫௪. வெய்யோன் படியும் மால்வரை - அத்தமயகிரி.

௫௫. மண்டலம் - வட்டம் நேரோடல்.

௫௬. இடபமால் - இடபவடிவங்கொண்ட திருமால். என்று - எக்காலத்து.

௫எ. கடல் திடராயிற்று.

௫கூ. பல்கால் தலைவர் யாரெனன.

௬க. கொக்கு - குதிரை.

௬உ. குதிரைச்செட்டி கூறுவான். கற்கிகள் - குதிரைகள்.

௬௩. பெருந்துறை - பெரியகடற்றுறை, ஒரு திருப்பதி. உலுகம் - கோட்டான். குதிரை, வேதமுதலிய எழுபத்தற் பிறந்தன என்பதை, "வெடிவாற் பைங்கட் குறுநரி யினத்தினை, யேடர்க் கேரன்றி யினனூற் கியைந்து, விதி போகிய வாலுளைப் புரவி, யாக்கிய விஞ்சைப் பிறைமுடி யந்தணன்" (கல். அ) எனவும், "மிக்க செழு மறைநா விற் கமல நாதன் வீழிப்புனலில் வின்னோர்க ளென்பர்

தம்பான், மைக்கடன்மே லமிர்தத்தி லங்கி மீதின் மல்குகருப் பையிலுலுக வண்டந் தன்னிற், றெக்கவெழு பேதமெனு மிவற்றிற் றோன்றுந் தொன்மையவா யீரிரண்டு துணைத்தா ளெற்றி, யொக்கவெளுக் கும்பரிக ளுளவாய் வானி லொண்புனலிற் செல்லு நெறி யுளவுமாகி.'' (திருவாத. குதிரை. சப) எனவும் வருவனவற்றாலுணர்க. மொத்தம் - தொகுதி; ''பரிக்குமிப் பரிமா மொத்தம்.'' என்பர் பின்னும்; எஉ.

சுச. வாயதம் - காக்கை. வெருகு - பூனை. எனம் - பன்றி. நாய்முதலியவற்றின் இயல்பையுடைய குதிரைகள் பொல்லா; மயூரமுதலியவற்றின் இயல்பையுடைய குதிரைகள் நல்லன. திருவாதவூரர்புராணம், குதிரையிட்டசருக்கம், நக, நஎ - ம் பாடல்களைப்பார்க்க.

சுரு. ஷை புராணம், ஷை சருக்கம், நஎ - ம் பாடலைப்பார்க்க.

சுஎ. வாலதி - வால். மேட்டிரம் - ஆண்குறி. ஷை புராணம், ஷை சருக்கம், நக - ம் பாடலைப்பார்க்க.

சுக. ஷைபுராணம், ஷைசருக்கம், சக - ம் பாடலைப்பார்க்க.

எ௦. ஷை புராணம், ஷை சருக்கம், நச, நரு - ம் பாடல்களைப்பார்க்க.

எக. மற்றும் தீங்கு இலை - வேறும் உள்ளனவாகிய தீங்குகள் இல்லை.

எஉ. கதிவெங்கால - நடையைவிரும்புகின்ற கால்களையுடையன. கந்துகம் - பந்து.

எந. 'சம்புவாவே' என்பது சிலேடை.

எச. இதிற் குதிரைகளின் வினைகள் கூறப்பெற்றுள்ளன.

எரு - எசு. இவற்றுற் குதிரையின் பெருமைகள் கூறப்பெற்றுள்ளன.

எக. அடலாலேதான் தாமதமாயிற்று. 'ஓர்பொழுதும் நில்லாது' என்பது, சிலேடை.

அ௦. தின்மை - தீமை; ஒதுவனவாகிய நன்மை தின்மை; ''அடியவர் நன்மை தின்மை யறிபவன்.'' என்பர்: (ரு) கக; ''தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே.'' (கம்ப. பயன், உ.)

அக. 'சித்திரமா' என்பது சிலேடை.

அந. இராவுத்தராயன் - குதிரைச் சேவகன்; இராவுத்தனென்பது, இராஜபுத்திரனென்னும் வடமொழிச் சிதைவென்பர்; அசு: ''இனிமைகூர்ந்திராவுத்தற்கு.''; ''கலாபத்தனிமயிலேறு மிராவுத்தனே.'' என்பது கந்தரலங்காரம், கு௦.

அச. நாறு - நாற்று. இச்செய்யுள், ''நரியைக் குதிரைசெய் வானு நரகரைத் தேவுசெய் வானும், விரதங்கொண் டாடவல் லானும் விச்சின்றி நாறுசெய் வானும்'' (திருநா. தே. திருவாரூர்) என்பதன் கருத்தைத் தழுவி வந்துள்ளது.

அரு. செண்டு - ஓராயுதம்; கொம்பு - அதன் முன்பாகம்.

அஅ. தூங்கலில்லாமல் - தாமதியாமல்.

கூ௦. திருமேனிக்கீடு-கவசம். கைவாளம் - கைக்கத்தி; ''கரவாளம்'' என்றார் முன்னும்; நச. அடிவடிம்பு-அடியின்விளிம்பு.

கக. ஆசையுடையன், சிலேடை.

கந. உழை - வீடு. செவ்வந்திமாலை, சிலேடை.

## உகூ - ம் திருவிளையாடல்.

க. கட்டுண்டேம். தொத்துவர் தொத்துக்கொள்வார்.

உ. முகமுகம்பார்த்து - ஒன்றன் முகத்தை ஒன்றுபார்த்து; (சந)உக. கயிற்றைநின்று. அங்கணம் - சலதாரை. ஊளையிடல் - நரியின் ஒலிக் குறிப்பு.

ந. தொண்டைவிடுவன-கூவுவன. உள்ள - உள்ளன.

ரு. யாணர் மாக்கள் - புதியனவாய்வந்த குதிரைகள்.

சு. மட்டித்து - கலந்து. இதவிய - இனிய. மொக்கணி - குதிரைக்குச்

கொள்ளுமுதலிய உணவு கட்டும்பை; "மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி, சொக்க தாகக் காட்டிய தொன்மையும்." (திருவா. கீர்த்தி. ௩௩-௩௪.)

௭. மறி - ஆடு. சூகரம் - பன்றி.

௮. 'மின்னுமலிடிக்குமா' என்பது ஒருபழமொழி.

௯. வரர் - சிறந்தவர்; தலைவர். அர - அரனே; இஃது இரக்கப்பொருளிலும்வரும்.

௧௨. 'நல்ல கல்யாணனன்றே' என்று இகழ்ந்தான், (௨௭) அடி: "என்னையின்றோர் கலியாண னாகக் காண்மின்" என்றதை உட்கொண்டு.

௧௪. கொணர்ந்த மா - குதிரை.

௧௬. சிவை - நரி. மந்துரை - குதிரைச்சாலை. இந்திரஞாலம் - இந்திரசாலம்; "இந்திர ஞாலங் காட்டிய வியல்பும்." (திருவா. கீர்த்தி. ௪௩.)

௧௭. வாசிவாரியப் பெருமான் - குதிரைச் சேவகர்களின் தலைவன்; வாசிவாரியர் - குதிரையைத்தடுத்துச் செலுத்துவோர். திண்ணிமை - வன்மை; தைரியம்.

௧௮. ஆரணமோதிற்று - நீ வேத மோதியது. கோரம் - கொடுமை. சிறையறை - சிறைச்சாலை.

௫௦-ம் திருவிளையாடல்.

௧. அறையகத்து - அறையில். 'இரும்புதருமனத்தேனை' என்பது திருவாசகத்தில், திருவேசறவின் முதற்குறிப்பு.

௨. 'பொய்யாவையைமாநதி' என்பது, "வையை யென்னும் பொய்யாக் குலக்கொடி" (சில. புறஞ்சேரி. ௧௭௦.) என்பதைத்தழுவியது. முதுமாமங்கை - செம்மனச்செல்வி. முகில் நாயகன் - வருணன்.

௪. கால் கட்ட - வாய்க்கால்களின் தலைப்பிற்பட்டலிட. பயம் - நீர், அச்சம்.

௫. வெள்ளமிருத்தலிடத்துப்பறையறைவித்தல் மரபு. சும்மை - ஒலி. மனம் தன்றி. என்னுருயோ.

௬. கோல் - அளக்குங்கோல்; அறை - வரையறைசெய்த கோட்டம்: கோலால் அறுதிசெய்த இடமுமாம்; "குரம்புகொண் டடைப்பன் யானே கோலறை முழுது மென்ன" (திருவாத. மண்சுமந்த. ௩௩.)

௮. விதிரா - நடுங்கி.

௯. நாதமாகிய பறை; 'நாதப்பறையன்' என்பது, "நாதப்பறையினர்" (திருவா. அன்னை. ௧.) என்பதைத்தழுவியது. இச்செய்யுளிற், சிலசாதிப்பெயர்கள் தொனித்தல்காண்க; நஞ்சுண்டோனென்பது, கள்ளர்வகையில், ஒன்றன்பெயர். பிட்டு உதிர் - உதிர்ந்தபிட்டு. கொடுக்கு - தொங்கல்.

௧௧. அம்மே - அம்மையே. சொற்றாள் - மண்வேலைசெய்பவன்; "மண்ணகழ்ந் தெடுத்து வருபுனல் வையையக், கூலஞ் சுமக்கக் கொற்றா ளாகி." (கல். ௪௧.); கொற்று - மண்வேலை யென்பதை, ௨௩: "கொற்றளவிவரி லீங்கோர் கூடைமண் சுமந்தாரில்லை." என்பதனாலுமுணர்க.

௧௪. அந்தத்திராக்குப்பொருள் - முடித்துவைத்திருக்கும்பொருள். கந்தித்து - மணம்வீசி. உண்டு - உள்ளது.

௧௫. வட்டமுறுபிட்டு - வட்டவடிவமாகக் கிண்ணத்தாற்கொட்டி அமைத்துவைத்திருக்கும் பிட்டு; ௧௮: "கனவிய வட்டப் பிட்டுக் கைக்கொடு பிட்டுப் பிட்டு.". அம்மை, விளி.

௧௬. உழப்பாது சுமர்திடும்.

௧௯. அம்மை, விளி.

௨௦. என்ன - என்றுசொல்ல. உதிரை - பிட்டு. 'வித்துநேர்பிட்டு' என்றபாடத்திற்கு விதைநெல்லரிசியாலாக்கிய பிட்டென்று பொருள்கொள்க

௨௨. கோலுறையை. நல்லாள் நன்மையையுடைய ஆட்களை. வாங்குதல் - கொள்ளுதல்.

௨௫. குழம்புதல் - கலங்குதல். கொட்டு அணைத்து - மண்வெட்டியைத்தழுவிக்கொண்டு. கிடை - கிடத்தல்; ஒப்புமாம்.

உஎ. வடிவன் நீ - அழகுடையவனாகிய நீ; உஅ: "மெல்லியவடிவனீ". கறுத்த - கோபித்த; தொகுத்தல்.

உஅ. நயந்து அவரோகிம்.

உகூ. பந்து-வந்து; திசைச்சொல்; இது, 'வைத்து' என்பதுபோலப்பொருளின்றிப்பயிலுவதொருசொல்.

௩0. பகுந்து - பங்கிட்டு.

௩க. சதமுறை - பலமுறை. அதர்பட - வழிபட.

௩உ. நீரக்குறை - கரையின்குறையை. கவ்வை - துன்பம்; ஒலியுமாம். தவ்வுதல் - தாவுதல்.

௩அ. கங்கைக்கரையுயர்மண் - திருமுடியில் வைத்திருந்தமண்.

௩கூ. திருவருளுக்கு உண்டோ - திருவருளுக்கு எல்லையுண்டோ.

சக. பிட்டுவாணிச்சிக்கு.

சஉ. புடைப்பு - அடியாலுண்டாகிய வீக்கம்.

சச. இவன்முகத்தால் - இவன்வழியால். விடுவித்தற்கு - சிறையினின்றும் நீக்குதற்கு. தன்வழி திரிதற்கு இவனை விடுவிடு.

சரு. மதுவாதத்தெருவிற் பரியேறும். கொற்றகன் - படைத்தலைவன்.

சஅ. 'நமச்சிவாயவாழ்க' என்பது, திருவாசகத்திற் சிவபுராண அகவலின் முதற்குறிப்பு.

சகூ. தூயசூத்திரர் - சற்சூத்திரர்.

ரு0. அன்ன, நெஞ்சறிசுட்டு. மா-அழகு. என்ன-என்று திருவாதவூரர் துதிக்க.

ருக. சித்திரக்கோவை - திருச்சிற்றம்பலக்கோவையார்.

ருஉ. மன்னன்-பாண்டியன்; எழுவாய். அம்மை - செம்மனச்செல்வி.

ரு௩. மேய்ந்து - வேய்ந்து. எறும் ஆறும்.

ருச. உயர்துறக்கம் - சிவலோகம்.

ருரு. பறைதல் - சொல்லுதல். இறைவன் - சிவபெருமான்.

ருசு. அவதாரங்கள்-திருவிளையாடல்கள்.

## ௬க - ம் திருவிளையாடல்.

க. பெருங்கிராமம் - ஐந்நூறுகுடிகள் நிறைந்தவூர்; (சூடா.இடப்பெயர். ௩சு.).

உ. பாகவதப்பிரமசாரி-வைணவப்பிரமசாரி. புக்கில் - வீடு. உதகஞ்செய்ய - தாரைவார்க்க.

௩. மனங்குன்ற. கன்னி - எட்டுப்பிராயமுடையவள்; "அகவை யிருநான்குடையாள் கன்னி" மாயூரப் புராணம்.). இடுகுறி-இடப்படும் நேர்க்குறி.

ச. வேதசூத்திரம் - வேதசம்பந்தமான சூத்திரங்கள்.

ரு. சாறு-கலியாணம். நெறிதப்பாவாறு உதகம் அளித்து; உதகம் - தாரை. இனியபல - ஸ்திரீதனம். பந்தம் - உறவு; முறை.

கூ. தனு - வில், உடம்பு. மரல் அன - மரல்நாரையொத்த.

கக. பனட, வவல்.

கஉ. அமுதுபடி - அரிசி. மேல் அமுதுசெய்யுமாறு ஓதுமென்ன.

கஎ. பட்டுஅணை-பட்டாலாகிய அணை. நோக்கு - கண்ணில். அன்னையில் புதல்வன் - தாயில்லாதபிள்ளை; பிறப்பில்லாதவர்.

ககூ. திருவினாள் - லக்ஷ்மி. வளர்த்திவைத்து - தூங்கச்செய்துவைத்து.

## ௬உ - ம் திருவிளையாடல்.

உ. அலிது - பரதநூல்.

௩. மிக்கசீர்த்தி, பாண்டியனுடையது. வளவன்கேட்டு. இகலி - மாறுபட்டு; உ௩: "இகல்விட்டு" என்பதனால், சோழன் இப்பொழுது மாறுபட்டிருந்தமை வலியுறும்.

சு. உளம் பட - மனமெலிய.

எ. விளிவு - அவமானம்.

அ. விருது - எண்ணெண்கலைவல்லானென்பது. புயங்கநட்டம் - ஒருவகைநடனம். வாமத்தாள் - இடத்தாள்.

கூ. சென்னிசெற்றத்தால் - சோழன்மீதுள்ள கோபத்தால்.

௫. புண்ணில் ஈ மொய்ப்ப. ஆரோ வென்னத் திரிந்தான்.

௬. கன்னி - கன்னியாகுமரியென்னும் ஆறு. கம்பிப்பன் - நடுங்குவன்.

௭. புறத்து ஈர்த்து - வெளியே இழுத்து.

௯. 'பட்டகுணம் சுட்டாலுந்தீராது' என்பது ஒருபழமொழி.

௧௦. தானவைபவம் - தலவிசேடம்.

௧௧. இறையவன், எழுவாய்.

௧௨. பரிவுகூர்ந்து போக்குகின்றேம்.

௧௩. தானஞ்செய்யென்று சொல்லுதற்கு உன்கையிற் பொருளில்லை. கோவுக்கு - பசுவுக்கு.

௧௫. செறு - அடக்கு. நோக்கு - செய்.

௧௬. அணுக்கட்கு - உயிர்களுக்கு.

## ௩௫ - ம் திருவிளையாடல்.

௨. எல் - ஒளி. கூடா - வந்துசேர்ந்து.

௩. ஆங்காரித்து - அகங்காரங்கொண்டு.

௪. அங்கம் - போர். கெருடி - வில்வித்தைமுதலியவை பயிலும் கூடம். மைந்தர் - மாணுக்கர். சிரமம் - யுத்தப்பயிற்சி; "சிலைக்குரு விறற்குரு குலக்குமர ருக்குவரு சிரமநிலை சான்மி கென." (பார. வாரணவத. ௫௭).

௫. நாயனீரே - தலைவரே. கெருடிகட்டி, நம்முளோரைக்கிச் சாதிப்பிக்கின்றனென இயைக்க.

௬. அடியார்க்குநல்லான் - சோமசுந்தரக் கடவுள். கன்றல் - வாடுதல். பணிக்கு - வில்வித்தை முதலியவற்றைக் கற்பிக்குந்தொழில்.

௭. அவன்றனை - ஆசிரியனை. வளம் - தனதுபெருமை.

௮. அருள் - தொடர்புபற்றுதே யாவரிடத்தும் தோன்றும் இரக்கம். இடம் - சமயம்.

௯. மிண்டு - இடக்கரானமொழிகள்.

௧௦. முல்லை - கற்பு. சொக்கன் தானே அறிகுவன் - சொக்கநாயகர் இயல்பாகவே அறிந்தருளுவார்; யாம் விண்ணப்பிக்கவேண்டுவதில்லை.

௧௧. தின்மை - தீயசெயல். பாடை - சபதம்.

௧௩. மற்று ஓரெதிரிலா.

௧௫. பத்திரம் - ஒருவகைக்கத்தி. ஓட்டி - சபதம்செய்து.

௧௬. நாகமாபுரம் - மதுரை; "அதோரகாக்யஸ்ய புரஸ்யநாதம்" (ரகுவம்சம், ௬-ம் ஸர்க்கம், ௫௯) எனவும், "உரகமாநகரான் றென்னனிவன்" (இரகு. மாலை. ௧௦௪) எனவும் வருவனவற்றுள், 'உரகாக்யஸ்யபுரம்' எனவும், 'உரகமாநகர்' எனவும் மதுரை கூறப்பட்டிருத்தல்காண்க.

௧௭. நெஞ்சுளோர் - தைரியமுடையோர். கஞ்சவார் - வெண்கலத்தாற் செய்தவார்.

௨௨. சொட்டை - ஒருவகை ஆயுதம்.

௨௪. வென்றிகொள் மைந்தர் - ஆசிரியருடைய வெற்றியைத் தமதாகக்கொண்ட மாணுக்கர்கள். சித்தனை வென்றமையின், 'வன்றிறனுதர்' என்றார்.

௨௬. எந்து - என்ன; திசைச்சொல்; "அதெந்துவே யென்றரு ளாயே" (திருவா. அருட்பத்து, ௧-௧௦).

௨௮. பொத்திய - மறைத்த. மெத்திய - நிரம்பிய.

௩௧. 'உண்டென் றேத்தும் வேற்றிகொள் பணிக்கன்' என்றது, ஆஸ்திகனென்றபடி.

## ௩௬ - ம் திருவிளையாடல்.

௨. கறுவி - கோபித்து.

௩. இந்நாகம் விட்டுவிடமென்பார், 'நஞ்சங் கண்படவிழித்து' என்றார்.

௫. பாவகப்பகுவாய் - நெருப்பைக் கக்குகின்ற பிளந்தவாய். உரத்திற் சேர்ந்தது - மார்பால் நகர்ந்து வந்தது; உரம் - வலியுமாம்.

